குறிப்பு:- இவ்விதழில் வந்துள்ள நாட்குறிப்பின் எஞ்சியபகுதி அடுத்த இதழுடன் அனுப்பப்பெறும்.

## ஆசிரியர் குழு



## உள்ளுறை

பக்கம்

1. முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழ்–உரைநடை .... 145
2. திருமந்திரம் Tirumantiram ஐந்தாம் தந்திரம்... 149
3. அறமே அழியாத்துணை .... 152
4. சிதம்பர சுவாமிகளும், பொங்கல் விழாவும் .... 157
5. யாக்கை நிலையாமை .... 161
6. The Six Enemies of Food .... 165
7. தருமையாதீனம் குருமகா சந்நிதானம் வழங்கியருளிய அருளுரை .... 167
8. Hymns of the Tamil Saivite Saints ... 175
9. துன்பக் கடல் .... 176
10. திருவாசக அநுபூதி உரை ... 182
11. சிறியேம் சிற்றில் சிதையேலே ... 183
12. திருப்புத்தூரில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு அன்னம்பாலிப்பு ... 189

# 7. மஹாலக்ஷ்மீ ( ஐசுவரிய லக்ஷ்மீ )

சதுர்புஜாம் மஹாலக்ஷ்மீம் கஜயுக்ம ஸுபூஜிதாம்!
பத்மபத்ராப நயனாம் வராபய கரோஜ்வலாம்!
ஊர்த்வ த்வயகரே சாப்ஜம் ததீம் சுக்லவஸ்த்ரகாம்!
பத்ராஸநே ஸுகாஸீநாம் பஜேஹம் ஸர்வமங்களாம்!

நான்கு கைகளையுடையவளும், இரண்டு யானைகளால் பூஜிக்கப்படுபவளும் தாமரையிதழ் போன்ற கண்களையுடையவளும், வரதம், அபயம் என இரண்டு கைகளோடு விளங்குபவளும், மேல் இரண்டு கைகளில் இரண்டு தாமரைகளையுடையவளும், வெண்மையான ஆடையையுடையவளும், பத்ராஸநத்தில் சுகமாக விற்றிருப்பவளும், மங்களஸ்வருபியானவளும் ஆகிய மகாலக்ஷ்மியை தியானம் செய்கிறேன்.

மாறுதல் குறிப்பு

1. பெயர் ஐச்வர்யலக்ஷ்மீ
2. இரண்டு பக்கத்திலும் யானைகளில்லை,
3. வரதத்துக்குப் பதில் இடதுகை துடையின்மேல் இருக்கிறது
4. வரதத்துக்குப் பதிலாக வலது மேல்க்கையில் நீலோத்பலம் இருக்கிறது
5. உட்கார்ந்த உருவம்
6. இரண்டு பக்கத்திலும் இருசக்திகள்.

உ

சிவமயம்

திருச்செந்திலாண்டவன் துணை




மலர் 18 | பராபவளு பங்குனித் திங்கள் 1ம்உ [15-3-67] | இதழ் 3

# முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழ்

## உரை நடை

பாலகவி வயிநாகரம்,
திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்,
தேவகோட்டை.

(மலர் 18. இதழ் 2-ன் தொடர்ச்சி)

தன்னுெத்த தெய்வச் சிருருமிள வீரரும்
தாணிழற் கீழ்நிற்பவிச்
சகதண்ட மண்டல மடுக்கழியும் நாளமரர்
தமையழக் காண்பவனிவன்
நின்னைப பொருட்படுத் தொருவிரற் றலைசுட்டி
நீள்கழற் ருளுதைந்து
நெடுமலர்க் கண்பிசைந் தழுதழு தழைத்தனன்
நினக்கிதில் வியப்பில்லைகாண்

பின்னற் றிரைச்சுர நதித்தண் டுறைத்தேவர்
பேதைக் குழாங்களென்னப்
பெருகுந் தடம்புனற் காவிரிப் பூவிரி
பெருந்தண் டுறைச்சிறைவிரித்
தன்னக் குழாந்திளைத் தாடுசோ ணாடனுடன்
அம்புலீ யாடவாவே
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ யாடவாவே. 71

தன்னையொத்த தெய்வச் சிறுவர்களாகிய விநாயகப் பெருமான் முதலியவர்களுடன் வீரவாகு முதலிய இளையவர்களாகிய நவ வீரர்களும் திருவடி நீழலின் கீழே நிற்க, இந்தப் பூமியும் அண்ட கோளங்களாகிய மற்ற மண்டலக் கூட்டங்களும் அழிகின்ற பேரூழிக் காலத்தில் தேவர்களனைவரும் அழுவதைப் பார்ப்பவன் இவன், உன்னை ஒரு பொருளாகக் கருதி ஒரு விரல் தலையினுற் சுட்டி நீண்ட கழலணிந்த தாள்களை உதைந்து நெடிய மலரனைய கண்களைப் பிசைந்து அழுது அழுது அழைத்தான். உனக்கு இதில் ஒரு வியப்பில்லை. பின்னி வருகின்ற அலைகளையுடைய ஆகாய கங்கையின் குளிர்ந்த துறையிலே படிகின்ற தெய்வமங்கையரின் கூட்டங்களைப் போல பெருகி வருகின்ற மிருதியான நீரையுடைய காவிரியாற்றினது பூக்கள் விரிந்த பெரிய தண்ணிய துறைகளில் சிறகுகளை விரித்து அன்னக் கூட்டங்கள் நீர் திளைத்தாடுகின்ற சோழ நாடனுடன் சந்திரனே! விளையாட வருவாயாக. அழகு பொலிகின்ற கந்தபுரிப்பதி தழையும்படி வந்துள்ள கந்தப்பெருமானுடன் சந்திரனே! விளையாட வருவாயாக.

## சிற்றிற் பருவம்

குறுமென் னடையு நெடுவெணிலாக்
கோட்டு நகையும் வாட்டடங்கண்
குளிர முகந்துன் டொளிர்சுட்டிக்
குஞ்சி திருத்தி நறுங்குதலை
முறுகு நறைத்தேன் கனிபவள
முத்துன் டுச்சி மோந்துகொண்டுன்
முகமுந் துடைத்து விளையாட
முன்றிற் புறத்துப் பொன்றதும்பி

இறுகும் புளகக் கும்பமுலை
எம்பி ராட்டி விடுத்ததுமற்
றிளையார் மறுக மறுகுதொறும்
இடுக்கண் செயற்கோ வெந்தாய்நின்
சிறுகிண் கிணிச்செஞ் சீறடியாற்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செந்நெற் பழனப் புள்ளூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 72

குறுகுறுப்பான மெல்லிய நடையையும் நீண்ட வெள்ளிய நிலவை யொத்துப் புன்முறுவலுடன் தோன்றுகின்ற நகையையும் ஒள்ளிய அகன்ற கண்கள் குளிரும்படி முகந்துண்டு, விளங்குகின்ற சுட்டியை அணிந்த முடியைத் திருத்தி நல்ல குதலை மொழிகள் பேசுகின்ற முதிர்ந்த மணமுள்ள தேன் கனியும் பவளம் போன்ற திருவாயின் முத்தங்கொண்டு, உனது திருமுகத்தையும் துடைத்துப் பொன் போன்ற பசலை பரந்து இறுகிய பெரிய குடத்தை யொத்த கொங்கையையுடைய எமது பெருமாட்டியாகிய உமாதேவி, முன்றிற் புறத்தில் உன்னை விளையாடும்படி விட்டது, இளையார்களாகிய நாங்கள் வருந்தும்படி வீதி தோறும் இடுக்கண் செய்வதற்காகவா? எமது தந்தையே! உனது சிறிய கிண்கிணி யணிந்த செவ்விய சிற்றடியால், சிறியேங்களது சிற்றிலைச் சிதையாதிருப்பாயாக. செந்நெல் நிறைந்த வயல்களையுடைய புள்ளூரனே! சிறியேங்களது சிற்றிலைச் சிதையாதிருப்பாயாக.

கொழுநாண் மலர்க்கற் பகமுநறைக்
குரவு நாறு நறுங்குஞ்சிக்
கோமான் மகனே நங்கள்குலக்
கொழுந்தே யென்று குறையிரந்து
தொழுவா னவர்த முடிசூட்டுஞ்
சோதி முடியிற் றுகளெழநின்
துணைத்தாள் வண்டற் றுறைப்புழுதித்
தூளி படினும் படுகசுடர்க்
கழுவா மணியு நிலவுவிரி
கதிர்நித் திலமு முமையம்மை
கண்ணி லுறுத்த வடிகேணின்
காலி லுறுத்தல் கடனன்றாற்

செழுநான் மறையின் பெருஞ்செல்வச்
செருக்கே சிற்றில் சிதையேலே
செந்நெற் பழனப் புள்ளூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 73

கொழுமையான கற்பகத் தருவின் புதுப்பூக்களும் தேன் சிந்துகின்ற குரா மலர்களும் மணக்கும் நறிய தலைமயிரை யுடைய சிவபெருமானது திருமகனே! எங்களது குலக் கொழுந்தே! என்று குறையிரந்து நின்று தொழுகின்ற தேவர்கள் தமது தலையிலே சூட்டுகின்ற ஒளி பொருந்திய முடி களில் துகள் எழும்படி உனது இரண்டு திருத்தாள்களிலும் எங்கள் விளையாட்டிடத்துப் புழுதித் தூளி பட்டாலும் படட்டும். ஒளி வீசுகின்ற பெரிய மணிகளும் நிலவு விரிக்கின்ற ஒள்ளிய முத்துக்களும் எங்களது சிற்றில்களிலிருந்து உமையம்மையின் கண்ணில் உறுத்தும்படி சுவாமி! உனது காலில் உறுத்துதல் முறையாகாது. செழிப்பாகிய நான்கு வேதங்களாலும் துதிக்கப் பெறுகின்ற பெரிய செல்வச்செருக்கை உடையவனே! சிறியேங் களது சிற்றிலைச் சிதையாதிருப்பாயாக. செந்நெல் நிறைந்த வயல்களையுடைய புள்ளூரனே! சிறியேங்களது சிற்றிலைச் சிதையாதிருப்பாயாக.

---

(தொடரும்)

# திருமந்திரம் TIRUMANTIRAM

## ஐந்தாம் தந்திரம் Tantra the Fifth

டாக்டர், திரு. பா. நடராசன் அவர்கள் M. A., D. Litt.,
Member, Legislative Assembly,
MADRAS-31.

---

மலர் 18, இதழ் 2-ன் தொடர்ச்சி

### All Faiths lead but to the Lord

### எல்லாச் சமயமும் இறைவனுக்கே வழி காட்டுகின்றன.

140. ஒன்றது பேரூர், வழியாறு அதற்குள
என்றது போல இருமுச் சமயமும்;
நன்றிது, தீதிது என்றுரை யாளர்கள்
குன்று குரைத்தெழு நாயை யொத்தார்களே.

One, the Great city,
Six, the roads that lead to it;
Thus are the faiths six;
They that Contend, "this true; this false"
Are unto the dog that in ire barketh at the hill.

பேரின்பப்பேறு என்பது ஒரே ஊர். அதனை அடைய ஆறு வழிகள் உள்ளன; அங்ஙனமே ஆறு சமயங்களும் இச் சமயம் நன்று; அச்சமயம் தீது என்று வாது செய்கின்றவர்கள், குன்றை நோக்கி கோபித்துக் குரைக்கும் நாயினை ஒப்பர்.

### Come ye apart, and Seek the Lord

### இறைவனைத் தேடி நாடுக.

141. சைவப் பெருமை த்தனி நாயகன்தன்னை
உய்ய வுயிர்க்கின்ற ஒண்சுடர் நந்தியை
மெய்ய பெருமையர்க்கு அன்பனை, இன்பம்செய்
வையத் தலைவனை வந்தடைந்து உய்மினே.

He is the incomparable Lord of the magnificient path of Saivam;
He is Nandi of Divine Lustre that breaths the etnernal [life of Grace;
Beloved is He of the truly great
The Lord of all universe, the source of all joy;
Come ye, stand apart, seek, realize and be redeemed.

சைவநெறிக்கு சிறப்பாக விளங்கும் ஒப்பற்ற தலைவனாக இறைவன் இருக்கின்றான்; வீடு பெறுமாறு அருளை வழங்கு கின்ற தூயஒளி பெற்ற நந்தியும் அவனே. மெய்த்தவப் பெரி யார்க்கு அன்பனாயிருக்கின்றான்; அனைத்துலகுக்கும் தலைமை பூண்டு இன்பத்தை நல்குகின்றான்; அவனைச் சிந்தித்து நாடி வீடுபெறுவீர்களாக.

### 'Thou art He' – is the teaching of the True Path

### 'இவன் அவன்' என்று உணர்வதே மெய்ந்நெறி

142. சிவனவன் வைத்ததோர் தெய்வ நெறியில்
பவன்அவன் வைத்த பழவழி நாடி
'இவன்அவன்' என்பது அறியவல் லார்கட்கு
அவன்அவன் அங்குள தாம்கட னாமே.

Siva laid the divine path ancient
That leadeth to the Home Eternal
Do thou seek Him that way;
An thou knoweth thou art He
Thou Shalt duly find Him within Thee.

சிவபெருமானே வகுத்தது ஞானநெறி; அதுவே வீட்டு நெறி. அவனே வகுத்த அந்த தொன்மை நெறியில் சென்று நீயே அவன் என்பதை உணர, அவன் அவ்வாறே உன் னுள்ளேயே வெளிப்படுகின்றான்.

குறிப்பு வரி 2, பவன் – வீடு

### The Six Faiths availeth not; the True Path is through Kundalini

### அறுசமயங்களும் அவமே; குண்டலினிமார்க்கமே வீட்டுநெறி

143. ஆமா றுரைக்கும் அறுசம யாதிக்குப்
போமாறு தானில்லை; புண்ணியம் அல்லதுஅங்கு;

ஆமாம் வழியார்க்கும், அவ்வே றுயிர்கட்கும்
போமாறுஅவ் வாதாரப் பூங்கொடி யாளே.

The six faiths that profess the means to Becoming
Are but blind alleys all;
No good Cometh by following them;
The true path of Becoming for all life to pursue
Is but the path of divine Kundalini Sakti
The blossom vine through the six centres courseth.

வீடுபேற்றுக்கு வழி காட்டுவனவாகச் சொல்லும் அறு சமயங்களும் அவ்வாறு வழி காட்டுவனவாகவில்லை; அவற்றிலே செல்வதால் நற்பயன் ஏதுமில்லை. உண்மையான வழியினை நாடும் எவர்க்கும். எந்த உயிர்க்கும் உய்வினை அளிப்பது, உடம்புள்ளே மூலாதாரத்தில் வீற்றிருக்கும் பூங்கொடி போன்ற எழிலுடைய ஆதாரசக்தி வழியல்லதில்லை.

## The Lord ever leadeth

## இறைவன் என்றும் வழிகாட்டுகின்றான்

144. அரனெறி யாவது அறிந்தேனும் நானும்;
சிலநெறி தேடித் திரிந்தஅந் நாளும்
உரநெறி யுள்ளக் கடல்கடந் தேறும்
தரநெறி நின்ற தனிச்சுடர் தானே.

Now have I realized the Path of Hara;
In the past I sought Him in narrow paths
And strayed;
Lo! all the while He stood before me
Like a beacon light in the firmament
Guiding my voyage across the sea of my Soul's longing.

இப்பொழுது சிவநெறி இதுவென்பதைத் தெரிந்து கொண்டேன். ஆனால் வேறுவேறான சிறுநெறிகளில் நான் இறைவனைத் தேடி அலைந்த பண்டை நாட்களிலும், உறுதியோடு உள்ளக்கடலைக் கடந்து கரையேற. ஒப்பற்ற வான்சுடராய் வழிகாட்டிக் கொண்டிருந்தான் அவன்.

(தொடரும்)

# அறமே அழியாத் துணை

திரு. எ. மாணிக்கம் அவர்கள்,
விசூர்.



"அரிதரிது மானிடராய்ப் பிறத்தலரிது" என்ற ஔவை வாக்கானும், "எண்ணரிய பிறவிதனில் மானிடப் பிறவிதான் யாதினுமரிதரிது காண்" என்ற தாயுமானுரின் தகைசான்ற மொழியானும், "வாய்த்தது நந்தமக்கு ஈதோர் பிறவி மதித்திடுமின்", "இன்னம் பாலிக்குமோ இப்பிறவியே" என்ற ஒப்பாரில்லாத அப்பர் வாக்கானும்,......"மண்ணிலே வந்த பிறவியே எனக்கு வாலிதாம் இன்பமாம்" என்ற, ஆக்கமுற ஊக்குவிக்கும் சேக்கிழாரின் வாக்கானும், "எப்பிறப்பாயினும் ஏமாப்பொருவற்கு, மக்கட் பிறப்பிற் பிறிதில்லை" என்ற முனைப்பாடியாரின் முது மொழியானும், "உடம்பினை யானிருந்தோம்புகின்றேனே" என்ற திருமூலனாரின் சிலமிகு வாக்கானும், மானிடப் பிறவியின் மாண்பு மதித்து மகிழ்ந்து போற்றுதற்குரியதே யாகும்.

எனவே இத்தகு உயர்வுமிக்க பிறவி யெடுத்து, நாம் 'உண்டுண்டுறங்குவதே கண்ட பயன்' எனக் கருதாமல், "தோன்றிற் புகழொடு தோன்றுக" என்ற ஆன்றோரின் அமுத வாக்கினை ஊன்றி யுணர்ந்து, "ஒன்றா உலகத்து உயர்ந்த புகழல்லால் பொன்றுது நிற்பதொன்று இல்" என்றபடி மறுமைக்குத் துணையாகிய அழியாத அறத்தை, மறவாது ஆற்றி நிலையாய புகழினைப் பெறுவதே நம் தலையாய கடமையாகும். இதையே,

"உயர்குடி நனியுட் டோன்றல் ஊனமில் யாக்கை யாதல்.
மயர்வறு கல்வி கேள்வித் தன்மையால் வல்லராதல்
பெரிதுண ரதுவே யாதல் பேரறங் கோட லென்றுங்
கரிதிலை பெறுத லேடா பெற்றவர் மக்க ளென்பார்."

என வளையாபதியும், "அரும் பெறல் யாக்கையைப் பெற்ற பயத்தால், பெரும்பயனு மாற்றவே கொள்க" என நாலடியாரும்,

இன்னும் பிற நூல்களும் சால எடுத்துரைக்கின்றன. ஆதலின் நம்மால் இயன்றவரை, "ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே, செல்லும் வாயெல்லாம் செய்தல்" சீரிய நலம் பயக்கும். மேலும் "தம்மின் மெலியாரை நோக்கித் தமதுடைமை அம்மா பெரி தென்று அகமகிழ்க" "இயல்வது கரவேல்" என்றபடி "ஈத்து வக்கும் இன்பம்" பெற முயல்வதே அறிவுடைமையாகும். நம் மால் செய்யப்படுவது சிற்றுதவியேயாயினும், பெரும்பயன் விளைக்கும் என்பது அருமைசால் ஆன்றோரின் வாக்காகும். "காலத்தினுற் செய்த உதவி சிறிதெனினும், ஞாலத்தின் மாணப் பெரிது" "தான் சிறிதாயினுந் தக்கார்கைப் பட்டக்கால், வான் சிறிதாப் போர்த்து விடும்", "தெள்ளிய வாலின் சிறுபழத் தொரு விதை, தெண்ணீர்க் கயத்துச் சிறுமீன் சினையினும், நுண்ணிதே யாயினும் அண்ணல் யானை, அணிதேர்ப்புரவி ஆட் பெரும் படையொடு, மன்னர்க் கிருக்க நிழலாகும்மே" என்பவை ஆழ்ந்துணரத் தக்க அரிய பெரிய, சீரிய கருத்துக்களாகும். இச்செந்நெறியைப் பின்பற்றிச் செயலாற்றுவதே நம் கடனாகும். "செயற்பால தோரும் அறனே, ஒருவற்கு உயற்பால தோரும் பழி" எனவே அல்வினையை நீக்கி நல்வினையை நயந்து செய் தால் நன்மை விளைக்கும். "புத்தியொடு முத்திதரும், புண்ணி யத்தா லன்றியே, மத்தமிகு பாவத்தால் வாழ்வாமோ" என்றது நீதிவெண்பா. "புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு, அண்ணல் அது கண்டருள் புரியாநிற்கும்". என்றது திருமந் திரம். "அன்றறிவாம் என்னாது அறஞ்செய்க. மற்று அது பொன்றுங்கால் பொன்றாத் துணை" என்பது தெள்ளு தமிழ்ப் பாவலனும் வள்ளுவனார் வாக்கு. இறுதியிலே "செய்வினை யல்லால் சிறந்தார் பிறரில்லை" என்றபடி பட்டினத்து அடி களாரும் "பற்றித் தொடரும் இருவினைப் புண்ணிய பாவமுமே" என்று பகர்ந்தருளினர். அருளவே உயிர்க்கு உறுதியைத் தருவது அறமேயாதல் தெளிக.

"ஈதல் இசைபட வாழ்தல், அதுவல்லது
ஊதியம் இல்லை உயிர்க்கு."

ஆகையினாலே இத்தகைய ஊதியத்தை, ஆதியிலேயே சாதித் துக்கொள்வது மிக்க அறிவுடைமைக்கு அழகாகும். "இளமையும்

நில்லா, யாக்கையும் நில்லா, வளவிய வான்பெருஞ் செல்வமும் நில்லா, புத்தேளுலகம் புதல்வருந் தாரார், மிக்க அறமே விழுத் துணையாவது" என்பது மணிமேகலையின் அணிபோன்ற அறி வுரையாகும். இத்தகைய விழுமிய அறத்தை "அன்றறிவாம் என்னாது" இன்றே செய்ய முற்படுதல் நன்றே தரும் என்பதை அறநெறிச்சாரம்,

"காலைச் செய்வோ மென்று அறத்தைக் கடைப்பிடித்துச்,
சாலச் செய்வாரே தலைப்படுவார்"

என அச்சுறுத்தி நிற்கிறது. ஏனெனில் "இன்றைக் கிருந் தாரை நாளைக்கிருப்பரென்று எண்ணவோ திடமில்லாத வாழ்க் கை"யே நமது வாழ்வு என்று நன்றுணர்ந்த பெரியோர்கள் அறிந்து கூறியுள்ளார்கள். "நெருநல் உளனொருவன் இன் றில்லை என்னும் பெருமை உடைத்திவ் வுலகு" என வள்ளுவ னாரும், "இன்று வருமோ, நாளைக்கே வருமோ அல்லது மற் றென்று வருமோ அறியே னெங்கோவே" என வள்ளலாரும், "வீற்றிருந்தாள் அன்னை வீதிதனில் இருந்தாள். நேற்றிருந்தாள் இன்று வெந்து நீருனாள்" எனப் பட்டினத்தடிகளாரும், "அடப் பண்ணி வைத்தார் அடிசிலை உண்டார், மடக்கொடி யாரொடு மந்தணங் கொண்டார், இடப்பக்கமே இறை நொந்தது என்றார், கிடக்கப் படுத்தார் கிடந்தொழிந் தாரே" எனத்திருமூலனாரும், "யாக்கை; மலையாடு மஞ்சுபோல் தோன்றி மற்றாங்கே, நிலை யாது நீத்து விடும்" என நாலடி முனிவரும், இன்னம் பிறரும் ஆக்கை நிலையாமையை வலியுறுத்துகின்றனர்.

ஆகையினாலே கால அளவு போல் காட்டும் நாளானது, உடலை அறுக்கும் வாள் என்று உணர்ந்து, நாவை அடக்கி, விக்குள் வருவதற்குமுன் அறத்தை விரைந்து செய்தல் வேண்டும் எனப்பறை சாற்றி நிற்கிறது, பாங்கான தமிழ்மறை. "மின்னும் இளமை உளதாம் என மகிழ்ந்து, பின்னையறிவெனென்றல் பேதைமை"யாகும். ஏனெனில் நமதுயிருண்ண எமன் இளமை யிலேயும் வருவான். எப்பாடு பட்டாவது காலதாமதம் செய்யா மல் ஒவ்வொருவரும் செவ்வையுற இளமையிலேயே தருமஞ் செய்தல் வேண்டும் என அறநெறிச்சாரம் ஆணித்தரமாகக் கூறிநிற்கிறது.

மேலும் "வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை, எரிமுன்னர் வைத்தூறு போலக் கெடும்," என்பது குறள். "கொள்ளுங் கொடுங் கூற்றம் கொல்வான் குறுகுதன்முன், உள்ளங்கனிந் தறஞ்செய் துய்கவே" என்பது நன்னெறியின் பொன்னுன மன்னுதமிழ் வாக்கு. "மூப்பு மேல் வாராமை முன்னே அற வினையை, ஊக்கியதன் கண் முயலல் வேண்டும்" என சீலமிகு நாலடியார் கோலமுடன் கொண்டு, சால உரைக்கின்றது. "வாழ்வாவது மாயம், மண்ணுவது திண்ணம், தாழாது அறஞ் செய்மின்" என்பது அப்பர் தேவாரம். எனவே நில்லாத வற்றை நிலையின என்று நினைத்து அழிந்துபடாமல், இள மையும், செல்வமும் உள்ளபோதே வளமுற அறஞ் செய்து கொள்வது அறிவுடையோர் செயலாகும். மேலும் பெரிய செல்வமானது, கூத்தாடுமிடத்திற்குக் கூட்டம் சேர்வதைப் போல வரும். கூத்தாட்டம் முடிந்ததும் கூட்டம் கலைவ தைப் போலச் செல்வமும் "செல்வோம்" என நீங்கி விடும். "உடைமையும், வறுமையும் ஒருவழி நில்லா." ஆதலினுல் "அற்கா இயல்பிற்றுச் செல்வம், அது பெற்ருல் அற்குப ஆங்கே செயல்" எனக் குறள் காட்டுகிறது. "செல்வத்துப் பயனே ஈதல்" எனப் புறநானூறு ஊட்டுகிறது. "கைத்துண் டாம் போழ்தே கரவா தறஞ்செய்மின்" என்பது நாலடியார். "இரந்தோர்க் கீவதும் உடையோர் கடனே" என்பது நறுந் தொகை. "தானஞ் செய்ம்மின், தவம்பல தாங்குமின்" எனச் சிலப்பதிகாரமும், "கெடுவாய் மனனே கதிகேள், கரவா திடு வாய்" எனக் கந்தரநுபூதியும், சுந்தரமான வாக்காலே மந்திர மாகி, மாநிலத்தாரை ஊக்குகிறது. "ஆறிடு மேடும் மடுவும் போல் ஆம் செல்வம், மாறிடும் ஏறிடும்." அதனுல் தருமத்தை ஒருகாலும் மறவாது பெருமையுறச் செய்தல் வேண்டும் என்பது நல்வழி. மேலும்,

"ஈட்டிய வொண் பொருளும் இல்லொழியும் சுற்றத்தார்
காட்டுவாய் நேரே கலுழ்ந் தொழிவர் — முட்டும்
எரியின் உடம்பொழியும் ஈர்ங்குன்ற நாட!
தெரியின் அறமே துணை."

என்பது அற நெறிச்சாரம். இஃதுணர்ந்தும் "தவத்தோடு தானம் புரியாது வாழ்வார், அவத்தம் கழிகின்ற நாள்,"

எனவே வாழ்நாளில் வீழ்நாள் படாமல் நன்ருற்றிஞல், "தான முந் தவமும் தான் செய்வராயின், வானவர் நாடு வழி திறந் திடுமே" என்பது அருந்தமிழ் முதாட்டி ஒளவையின் செவ்வை மொழியாகும். ஆகவே "இரப்போர்க்கு இன்முகம் காட்டி இயன்றதை ஈதலே நன்று." "இரப்போர்க்கு ஈதலின் எய்துஞ் சிறப்பில்லை" என முதுமொழியும், "ஈத்துண்பானென்பான் இசை நடுவான்" என நான்மணிக் கடிகையும், " எத்திறத் தானும் இயைவ கரவாத, பற்றினிற் பாங்கினியது இல்" என இனியவை நாற்பதும் இன்னும் பிற சங்க இலக்கியங்களும் துங்கமுற இக் கருத்தைத் தாங்கி, பாங்குடன் ஓங்கி நிற்பதைக் காண்கிருேம். "பிறந்தோ ருறுவது பெருகிய துன்பம், பிறவா ருறுவது பெரும்பே ரின்பம்." எனவே "தானம் மறவாத தன்மையரேல், அஃதென்பார் வானகத்து வைப்பதோர் வைப்பு" என்பதுணர்ந்து கண்ணைத் துயின்றவமே காலத்தைப் போக்காமல் "ஒன்றே செய்" "நன்றே செய்" அதுவும் "இன்றே செய்" என்றபடி விண்ணுல கெய்த திண்ணமுடன் அறவினையை எண்ணமதில் கொண்டு மறவாதாற்றி மகிழ்ந்தின்புறுவோமாக.

---

# சிதம்பர சுவாமிகளும், பொங்கல் விழாவும்

முன்னுரை:

சிதம்பர சுவாமிகள் இற்றைக்குச் சற்றேறத்தாழ 300 ஆண்டுகட்குமுன் வாழ்ந்திருந்தவர். மதுரை மாநகரில், சங்கப் புலவர் வழி வந்த சைவ மரபில் தோன்றியவர். 'மீனாட்சியம்மை கலி வெண்பா' என்னும் நூலைப்பாடி, அருள் பெற்றவர். சிறந்த புலமை நலம் நிறைந்து, 'கவிராசர்' என்று பலராலும் போற்றப் பெற்றவர். விருத்தாசலம் குமார தேவர் அவர்களால் ஆட் கொள்ளப் பெற்றவர். பேரூர்ச் சாந்தலிங்க சுவாமிகள் பணித் தருளியபடி வைராக்கிய தீபம், வைராக்கிய சதகம், அவிரோத வுந்தியார், கொலை மறுத்தல், ஒழிவில் ஒடுக்கம் என்னும் நூல் களுக்கு உரை வகுத்தவர்.

திருப்போரூர்:

சிதம்பர சுவாமிகள், மதுரை ஸ்ரீ மீனாட்சி யம்மை தம் முடைய கனவில் மயில் வடிவாகத் தோன்றிக் காட்சி தந்து அருளிச் செய்தபடி, திருப்போரூர்க்குப் போந்து, பனைமரக் காடாக இருந்த இடத்தில், புற்று வடிவில் இருந்த முருகனின் திருவுருவைக் கண்டுணர்ந்தார். பழைய கோவிலைப் புதுப்பித்துப் பெரிய அளவில் திருப்பணிகள் பல செய்தார். அத்தலத்தின் புகழை மிகவும் ஓங்கச் செய்தவர் அவரே ஆவர். முருகனின் திருமுன்னிலையில் முறையீடு செய்து கொள்ளும் நிலையில், சிதம்பர சுவாமிகள் பாடியருளிய நூலே 'திருப்போரூர்ச் சந்நிதி முறை' என்பதாகும். சிவபிரானுக்குத் திருவாசகம் போல, முருகனுக்குத் திருப்போரூர்ச் சந்நிதி முறை அமைந்துள்ளது. அது கல் நெஞ்சத்தையும் கரைத்து உருக்கும் பெருஞ் சிறப் புடையது.

---

'திருக்கோயில்' ஆசிரியர் அனுமதி பெற்று இக்கட்டுரை பிரசுரிக்கப் படுகிறது.

திருப்போரூர்ச் சந்நிதிமுறை:

இத்தகைய சிறப்பு மிக்க சிதம்பர சுவாமிகள் அருளிய திருப்போரூர்ச் சந்நிதி முறையில், பொங்கல் விழாவை நினை வூட்டும் வகையில், ஒரு சிறந்த திருப்பாடல் அமைந்து காணப் படுகின்றது. உலக நிலையில் கொண்டாடப்பெறும் பொங்கல் விழாவை, ஞான நிலையில் நாம் கொண்டாடுவதற்குரிய முறையினை விளக்குவதாக, அப்பாடல் அமைந்திருக்கின்றது. நாம் நம் இல்லங்களில் அடுப்பு அமைத்து, விறகிட்டு நெருப்பு மூட்டிக் கலசம் ஏற்றி, உலைநீர் வார்த்துச் சோறு பொங்கி, உண்டு மகிழ்கின்றோம். இது நம்மனோர் கொண்டாடும் பொங்கல் விழா. இப்பொங்கல் விழாவின் அடிப்படையில் அடி யார்கள் நாடோறும் நிகழ்த்தி மகிழ்தற்குரிய பொங்கல் விழா, பின்வருமாறு இருத்தல் வேண்டுமெனச் சிதம்பர சுவாமிகள் குறிப்பிடுகின்றார்.

அருட்பொங்கல்:

அடியவர்களின் உள்ளமே வீடு. பொங்கலுக்கு முன்னர்ப் போகிப் பண்டிகை நாளில் வீட்டைக் கழுவி மெழுகித் தூய்மை செய்தல் போல, அடியவர்களும் தங்கள் மன மாசுகளைப் போக்கி, காம வெகுளி மயக்கம் முதலிய குற்றங்களை அகற்றிக் கொள்ளுதல் வேண்டும். பொங்கல் இடுதற்கு அடுப்பமைக் குங்கால், அதனை மூன்று கொம்மைகள் கொண்டதாகச் செய்வர். அதுபோல அன்பு – பொறுமை – அவா அறுத்தல் என்னும் அரிய பண்புகளைக் கொண்டு, அழற் குண்டம் அமைத்தல் வேண்டும். அதன்கண் மலமாகிய விறகை இட்டு, ஞானமாகிய நெருப்பை மூட்டுதல் வேண்டும். அதன் மீது உயி ராகிய பானையை ஏற்றி, அருளாகிய உலை நீர் வார்த்து, சிவா னந்தம் என்னும் இனிய உணவைத் தினமும் பொங்குதல் வேண்டும். பின்னர்ச் 'சிவபோதம்' என்னும் உயிரின் மயக்கச் சிற்றறிவு ஆகிய இருள் நீங்கும்படி, மவுனநிலை அடைதலாகிய ஒளி விளக்கு ஏற்றி நிட்டை கூடி, இன்புற உண்ணுதல் வேண்டும். இங்ஙனம், ஆண்டிற்குஒருமுறையன்றி, நாடோறும் பொங்கல் விழா நிகழ்த்தி இறைவனை வழிபட்டு மகிழ்தல், அடி யவர்களுக்கு உரிய இயல்பாகும் எனப் பின்வரும் பாடலில், சிதம்பர சுவாமிகள் தெரிவிக்கின்றார். அப்பாடல் வருமாறு:

அடியார் நிலமத் திருவகத்துள்,
அன்பு பொறுமை அவாஅறுத்தல்
அடுப்பாய் அமைத்து, மலவிறகின்
அதிக ஞானக் கனல்மூட்டி,
மடியாது இருந்த உயிர்க்கலசம்
வழிய அருட்பேர் உலேவார்த்து,
மாருப் பெருமைச் சிவானந்த
மதுரச் சோறு தினம் பொங்கி,
விடியாச் சீவ போதஇருள்
வீய மவுனச் சுடர்விளக்கு
விளக்கி, இருந்த படியிருந்து,
மேலாம் சிற்றில் விளேயாடும்
செடிதீர் அகத்தோர் புகழ்வாலே
சிறுவா! சிற்றில் சிதையேலே!
தேருர் வீதிப் போருரா!
சிறியேம் சிற்றில் சிதையேலே!

— *திருப்போரூர்ச் சந்நிதி முறை*

## இலக்கியப் பொங்கல்:

பொங்கல் விழாவின் இயல்பினை அடியவர்கள் மேல் ஏற்றி அழகுற விளக்கி, உருவகம் செய்து, முருகன் துதியாகச் சிதம்பர சுவாமிகள் பாடியிருக்கும் கவிதைத் திறன் மிகவும் சுவையுடையதாகத் திகழ்கின்றது. இதனை ஒருவகையில் "இலக்கியப் பொங்கல்" (இலக்கிய நூலில் வரும் பொங்கல், அனைவரும் பின்பற்றும் நிலையில் எடுத்துக் காட்டாக விளங்கும் பொங்கல்) எனக் கூறலாம். முருகனைப் பற்றிய துதி நூலில், பொங்கல் விழாவின் தத்துவ நுட்பத்தினை விளக்கும் வகையில் சிதம்பர சுவாமிகள் இப்பாடலை அமைத்திருத்தற்கு, ஏதேனும் ஒரு காரணமும் இயைபும் இருந்திருத்தல் வேண்டும். இப்பாடலை அவர் பாட நேர்ந்த நாள் பொங்கல் பண்டிகை நாளாகத் தற்செயலாக அமைந்து இருந்திருத்தல் கூடும். இவ்வாறு நேர்தல் ஒருவகையில் இயல்பே யாகும்.

## தற்செயல் நிகழ்ச்சி:

மனிதர் குல மாணிக்கமாகிய பண்டித ஜவஹர்லால் நேரு அவர்கள், தாம் எழுதிய "இந்தியாவின் புதுநிலைக் காட்சி"

(The Discovery of India) என்னும் நூலில், தாம் புத்தரைப் பற்றியும், அவர் தம் மறைவைப் பற்றியும், புத்தர் மறைந் தருளிய வைசாக பூர்ணமி நாளிலேயே தற்செயலாக எழுத நேர்ந்தமை, வியப்புக் குரியதாகும் எனக் குறிப்பிடுகின்றார்.*
ஆசிரியர் மறைமலை அடிகள் தாம் இயற்றிய 'மாணிக்க வாசகர் வரலாறும் காலமும்' என்னும் நூலில், கார்த்திகைத் திருவிழாவினைப் பற்றித் தற்செயலாகக் கார்த்திகைத் திரு நாளன்றே எழுத நேர்ந்தமையினை நினைந்து, வியந்து குறிப் பிட்டுள்ளார்.

முடிவுரை:

இங்ஙனமே, நமது சிதம்பர சுவாமிகளும், திருப்போரூர்ச் சந்நிதி முறையில் முருகனோடு நேரே இயைபு இல்லாத பொங் கல் விழாவினை, ஒருவகையால் இயைபுபடுத்திப் பாடி யிருத் தற்குக் காரணம், பொங்கல் விழா நாளில் அவர் அப்பாடலைப் பாடியருள நேர்ந்ததே யாகும் போலும் என நாம் கருத வாய்ப்பு உள்ளது.

[*சென்னைத் தியாகராய நகர்த் தருமபுர ஆதீன சமயப் பிரசார நிலை யத்தில், கனம் அமைச்சர்* திரு. G. பூவராகன், B.Sc., Hons. *அவர்களின் தலைமையில், பொங்கற் புது நாள் விழாவில், ஆற்றிய சொற் பொழிவினைத் தழுவியவை. ஆசிரியர்.*]

---

* "Mahavira, the founder of Jainism, and Buddha were contemporaries, and both came from the kshatryia warrior classes. Buddha died at the age of eighty, in 544 B. C., and the Buddhist era begins then ... (It is an odd coincidence that I am writing this on the Buddhist New Year's Day, 2488 — the day of full moon — the Vaisaka Purnima, as it is called.")

Shri Jawaharlal Nehru.
The Discovery of India.

# யாக்கை நிலையாமை

திரு. T. H. விவேகானந்தம் பிள்ளை அவர்கள், B. A., L. T.,
உதவி ஆணையாளர்.
இந்து அறநிலைப் பாதுகாப்பு இலாகா, காஞ்சிபுரம்.

"நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும்
பெருமை உடைத்திவ் வுலகு" — குறள்

"கன்றுள்ளார் நாளை மாள்வார், புகழுக்கும் இறுதியுண்டோ"
— கம்பர்.

"காக்கை நரி ஞாளி கழுகு பருந்துக் கிரையாம்
ஆக்கையினை யானென்றலையாமல் — வாக்குமனம்
எட்டாதவீட்டில் எனைக்காட்டு துட்டருளம்
தட்டாத சொக்கநாதா" — சொக்கநாத வெண்பா.

"நேற்றிருந்தான் இன்று செத்தான்" என்னும் பெருமையை இவ்வுலகம் உடைத்து. நாளை நமதல்ல. மாளிகை கட்டி, மனைவி மக்களுடன் சொகுசாக வாழ்ந்தவன் திடீரென இறந்தான் என்பதை நாம் கண்கூடாக காண்கிறோம். இங்ஙனம் உடல் நிலையாமையைக் கண்டும் மக்கள் செல்வம் தேடுவதிலேயே கண்ணுங் கருத்துமாய் உள்ளார்கள். அரசனுயிருந்தாலும் சரி, ஆண்டியாயிருந்தாலும் சரி அழிய வேண்டியதே. காக்கை, நரி, நாய், கழுகு, பருந்து, இவைகட்கு நம் யாக்கை உணவாவதற்கு வாய்ப்புண்டு. இப்படியிருந்தும் யான். எனது என்னும் இறுமாப்பு கொண்டுள்ளோம். ஆங்கில மொழியில் நான் என்று சொல்லும் பொழுதெல்லாம் பெரிய எழுத்தில் எழுதுகிறோம். நீ என்னும் பொழுது சிறிய எழுத்தை உபயோகப் படுத்துகிறோம். "Capital I and small you." தன்முனைப்பு, சுயநலம், தற்போதம், இவைகள், நாம் பிணமாகி ஒரு மணிநேரம் கழித்துத்தான் நம் உடலை விட்டுச் செல்லு

கின்றன. "Selfishness dies one hour after man's death.' 'உன்னைச் சிங்காரித்துனதழகு பாராமல், என்னைச் சிங்காரித் திடர்பட்டேன்," என்கிறார் ஞானதான வள்ளல் ஸ்ரீ குருஞான சம்பந்த சுவாமிகள். இதனை அறிந்து, தெளிந்து, இறைவனது திருவடியையே வணங்க வேண்டும்! "போற்றி! யாம் உய்ய ஆட்கொண்டருளும் பொன்மலர்கள்" என்பது மணிவாக்கு.

ஆறுபத்திமூன்று நாயன்மார்களில் ஒருவராகிய நந்தியருள் பெற்ற திருமூலர், ஆண்டுக்கு ஒரு பாட்டாக மூவாயிரம் ஆண்டு யோகிருத்து மூவாயிரம் பாடல்களைத் திருவாய் மலர்ந்தருளினார். இதுதான் சைவமரபில் 'பத்தாந்திருமுறை' என வழங்கப்படு கிறது. இது திருமந்திரமாலை எனப் பெயர் பெற்ற 'திருமந் திரம்' எனப்படும். இதை "தமிழ் மூவாயிரம்" எனவும் வழங் குவர். இந்த ஞானயோக நூலின் கண் யாக்கை நிலையாமை வலியுறுத்தப்பட்டுள்ளது. குறிப்பாக ஒரு பாட்டு:-

"அடப்பண்ணி வைத்தார் அடிசிலை உண்டார்
மடக்கொடி யாரொடு மந்தணங் கொண்டார்
இடப்பக் கமேஇறை நொந்தது என்றார்
கிடக்கப் படுத்தார் கிடந் தொழிந்தாரே"

காளை ஒருவன் களத்தில் போரடித்து விட்டு, வீட்டிற்கு வந்து சமைத்த உணவை சுவைத்துச் சாப்பிட்டான். பிறகு தன் மனைவியுடன் இரகசிய ஆலோசனை புரிந்தான். திடீரென இடப்பக்கம் வலிக்கிறது என்றான். தலைவைத்துத் தரையில் படுத்தான். பிணமாக மாறினான். இது நாம் காணும் காட்சி. இருப்பினும், நம் உயிரில் மாட்சி கொண்டுள்ளோம். மட நெஞ்சு, பாடம் கற்றுக் கொள்ள பயப்படுகிறது. ஏன்? மறுக்கிறது.

பதினாறாவது நூற்றாண்டில் இங்கிலாந்தில் வாழ்ந்த கிறிஸ் துவப்பாதிரி Robert Southwell என்னும் சமயத்தியாகி "The Image of Death" என்ற ஒரு அருமையான கவிதை யைப் புனைந்துள்ளார்.

இக் கவிதையின் ஒரு பகுதி, பின் வருமாறு:

I read the label underneath
That telleth me whereto I must;
I see the sentence too, that saith,
"Remember, man, thou art but dust".
But yet alas! how seldom I
Do think, indeed, that I must die!
Continually at my bed's head
A hearse doth hang, which doth me tell
That I ere morning may be dead,
Though now I feel myself fullwell;
But yet alas! for all this, I
Have little mind that I must die!
The gown which I am used to wear,
The knife wherewith I cut my meat
And eke that old and ancient chair,
Which is my only usual seat;
All these do tell me I must die,
And yet my life amend not I .—.
My ancestors are turned to clay,
And many of my mates are gone;
My youngers daily drop away,
And can I think to 'scape alone?
No, no; I know that I must die,
And yet my life amend not I .........
If none Can 'scape Death's dreadful dart
If rich and poor his beck obey;
If strong, if wise, if all do smart,
Then I to 'scape shall have no way:
Then grant me grace, O God! that I.
My life may mend, since I must die.

மதியூகிகளுடைய மதிநுட்பம், காலதேசத்திற்கு அப்பாற்பட்டவை என்பது வெள்ளிடை.

இவற்றை யெல்லாம் அறிந்து, அறிந்து, உணர்ந்து, உணர்ந்து, இரத்தின சுருக்கமாய் விண்ணப்பம் விடுத்துள்ளார், திருப்போரூர் சிலஸ்ரீ சிதம்பர சுவாமிகள்,

அது பின்வருமாறு:

நோயுற்றடராமல், நொந்துமனம் வாடாமற்
பாயிற்கிடவாமல் பாவியேன் — காயத்தை
ஓர் நொடிக்குள் நீக்கியெனை யொண்போரூர் ஐயாநின்
சீரடிக் கீழ்வைப்பாய் தெரிந்து.

இவ்விண்ணப்பம் சித்திபெற, சிவபோகசார அநுபூதிநிலை கைவரப் பெறல் வேண்டும்.

"ஏதேது செய்தாலும் ஏதேது சொன்னாலும்
ஏதேது சிந்தித்திருந்தாலும் — மாதேவா
நின்செயலே என்று நினதருளாலே உணரின்
என் செயலே காண்கிலேனே".

---

# THE SIX ENEMIES OF FOOD

VINOBA BHAVE



Food or agriculture has six enemies even as man has six foes, viz., lust, anger, greed, attachment, passion and envy.

Among them some are satwic, some are rajasic and some are tamasic.

Adversaries of the Rajas and Tamas variety are well-known as injurious and harmful, but the Satwic ones can sometimes be equally dangerous—they raise up obstacles in paramartha (doing good), create attachment and hold up all progress.

Likewise, food has six enemies, two of each type.

Beginning with the Tamas, they are tobacco and tea. The best soil of our country is consumed by these two crops.

Once when I was going round in Andhra, I saw a tobacco field, very neat and luxurious. Humorously, I said to its owner, "You seem to take care of this field and love it like a child."

He replied, "No, I love it more than my child."

"Why," asked I.

Without any pause he remarked, "So far as the child is concerned I have to feed him, but this field feeds me instead. Every plant yields eight annas and supports me as nothing else can."

---

The above article is reproduced with the kind permission of the Editor, Bhavan's Journal.

You will thus realise that if we want to grow sufficient food in the village, we have to give up tobacco-growing.

The Rajas enemies are jute and cotton. We do require cotton for our cloth. But we must spare only that much area for cotton as is genuinely needed for cloth.

I find that cloth is mercilessly beaten or crushed. They use bleaching powder and all sorts of things to give it a shining look.

I have often raised my voice against this passion for dazzling appearance. If a piece of cloth which can last for twelve months is so awfully treated as to last for only nine months, you will require twelve acres of land for cotton cloth for which nine acres would have sufficed. This is bad.

Thus we do require land for cotton but the minimum amount must be taken up for the same and the rest allotted to food.

Lastly, the Satwic ones—groundnut and sugar.

It is simply horrible to produce sugar for export and then import food, even bad food at times.

Wisdom demands that we should grow only as much cane as is required for our consumption of sugar and gur.

In other words, the area under cane should be decreased. Otherwise, I am afraid, you will have cane-grain riots in this country as you have the Hindu-Muslim or the Harijan-non-Harijan riots.

Like cane, only the barest minimum amount of land should go to groundnut. We must grow food on as much land as possible.

Thus food has six enemies.

---

உ

குருபாதம்

திருத்தருமையாதீனம் 25 ஆவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய
சுவாமிகள் வழங்கியருளிய

# அருளுரை

## உலகன்னை

காரிட்ட ஆணவக் கருவறையில் அறிவற்ற
கண்ணிலாக் குழவியைப்போற்
கட்டுண் டிருந்தஎமை வெளியில்விட் டல்லலாங்
காப்பிட் டதற்கிசைந்த
பேரிட்டு மெய்யென்று பேசுபாழ்ம் பொய்யுடல்
பெலக்கவினை அமுதம்ஊட்டிப்
பெரியபுவ னத்தினிடை போக்குவர வுறுகின்ற
பெரியவினை யாட்டமைத்திட்
டேரிட்ட தன்சுருதி மொழிதப்பின் நமனைவிட்
டிடருற வுறுக்கிஇடர்தீர்த்
திரவுபகல் இல்லாத பேரின்ப வீட்டில்
இசைந்துதுயில் கொண்மின்என்று
சீரிட்ட உலகன்னை வடிவான எந்தையே!
சித்தாந்த முத்திமுதலே!
சிரகிரி விளங்கவரு தட்சிணு மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

— தாயுமானவர்.

'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்பது ஔவை யார் வாக்கு. 'முன்னறி தெய்வம்' என்பது, 'கண்முன் காணப் படுகின்ற தெய்வம்' என்பதாம். 'கண்முன் காணப்படுகின்ற தெய்வம்' என்பதனுல், 'இவ்வாறு கண்முன் காணப்படாத தெய்வமும் ஒன்று இருக்கின்றது' என்பது தெளிவாகும். இன்னும் 'முன் அறி தெய்வம்' என்பதனுல், 'பின் அறி தெய்

---

'ஞானசம்பந்தம்' ஆசிரியர் அனுமதிபெற்று இக்கட்டுரை பிரசுரிக்கப் படுகிறது.

வமும் ஒன்று உள்ளது' என்பது புலனாகும். ஆகவே, மக்களுக்குக் கண்முன்னே முதலில் காணப்படும் தெய்வங்களாகக் காட்சியளிக்கின்ற அன்னையும் பிதாவும் போலத்தான், கண்முன் தோன்ருது மறைந்துநின்று பின்பு காணப்படும் நிலையில் உள்ள தெய்வமும் இருக்கின்றது' என்னும் உண்மையையும் ஔவையார் முன்சொன்ன வாக்கியத்தில் குறிப்பாக அருளியிருக்கின்ருர் என்பது புலனாகும்.

மக்களது தோற்றத்திற்கும், வளர்ச்சிக்கும், மற்றும் எவ்வகையான நலத்திற்கும் அன்னையும், பிதாவுமே முதல்வராய் இருப்பதுபோல, உயிர்களின் தோற்றத்திற்கும், வளர்ச்சிக்கும், மற்றும் எல்லாவகையான நலங்கட்கும் இறைவனே முதல்வனுய் இருக்கின்ருன். அன்னையும், பிதாவும் இருவர். ஆனல், இறைவன் ஒருவனேயன்ருே? அவன் எவ்வாறு உயிர்கட்கு அன்னையும் பிதாவுமாய் இருத்தல் கூடும் என்று ஐயுறலாம். 'இறைவன் ஒருவன்' என்பது உண்மையே. இறைவன், பொருளால் ஒன்ருயினும், 'சத்தி, சிவம்' என்னும் தன்மையால் இரண்டாய் இருக்கின்ருன். அஃது எவ்வாறு எனின், கதிரவன் (சூரியன்) ஒருவனே, 'தானும், தனது கதிரும்' என இரு தன்மைப் பட்டிருத்தல் போலவாம்.

'கதிரவன் இப்பூமிக்கு எத்துணையோ கல் தொலைவிற்கு அப்பால் இருக்கின்ருன்' என்பதும், 'ஆயினும், அவனது கதிர் இப்பூமியில் படிந்து பொருள்களை விளக்குகின்றது' என்பதும் நாம் நன்கு அறிந்தவை. பூமியில் படிந்து பொருள்களை விளக்குகின்ற கதிர்களை, 'பூமியில் படியவில்லை; அஃது எங்கோதான் இருக்கின்றது' என்று சொல்ல முடியுமோ? முடியாது. ஆயினும் பூமியில் விழுகின்ற கதிர்களை, 'சூரியன்' என்ருே அல்லது சூரியன்தான் பூமியில் வந்து நின்று பொருள்களை விளக்குகின்ருன் என்ருே சொல்ல முடியுமோ? அதுவும் முடியாது. அதனல், 'கதிரவனும், அவன் கதிரும் ஒன்றுதான்' என்றும் சொல்வதற்கில்லை. 'கதிரவனும் கதிரும் இரண்டல்ல' என்பது யாவரும் நன்கறிந்தது. அதனல், 'இரண்டும் இரண்டு தனிப் பொருள்' என்றல் கூடாது. இவ்வாறு, பகலவன் ஒருவனே, 'தானும், தனது ஒளியும்' என இரு தன்மைப்பட்டு நிற்றல்

போலத்தான், இறைவன் ஒருவனே, 'தானும், தனது சத்தியும்' என இருதன்மைப்பட்டிருக்கின்றான்.

சூரியன், பேரொளியாகிய ஆற்றல் உடையவனாய் இருப்பதனால், அவன் எங்கும் வியாபிப்பதும், அவன் முன்னிலையில் எத்தனையோ செயல்கள் நடைபெறுவதும் உண்டாகின்றன. அதுபோலத்தான், இறைவன் பேராற்றல் உடையவனாய் இருப்பதனால், அவன் எங்கும் வியாப்பிப்பதும், அவன் முன்னிலையில் எல்லாச் செயல்களும் நடைபெறுவதும் உண்டாகின்றன.

ஞாயிறு சடப்பொருள்; அதற்கு அறிவில்லை. அதனால், அதனது ஆற்றல் சடசத்தி. இறைவன் அறிவே வடிவானவன்; அதனால் அவனது சத்தி சிற்சத்தி. ஆகவே, ஞாயிறு, 'இவ்வுலகத்தில் இஃது இவ்வாறு நடைபெறவேண்டும்' என்று நினைப்பதில்லை. இறைவனோ, 'இவ்வுலகில் இஃது இவ்வாறு நடைபெறுக' என்று சங்கற்பிக்கின்றான் (நினைக்கின்றான்). அவனது சங்கற்பத்திற்கு எதிராக மற்றொரு சங்கற்பம் இல்லாமையால், அவன் சங்கற்பித்தவாறே எல்லாம் நடைபெறுகின்றன. இங்ஙனம் சங்கற்ப மாத்திரையால் எல்லாவற்றையும் செய்யும் அவனது பேராற்றலே சத்தி. அச் சத்தியை ஆள்பவன் இறைவன். ஆள்பவனாதலின் இறைவனே, 'ஆண்' என்றும், அவன் வழி நிற்பதாகலின் சத்தியை, 'பெண்' என்றும் கூறுதல் மரபாயிற்று. ஆகவே, உலகத்திற்கு முதலாகிய சத்தியும் சிவமும், உலகம் முழுவதற்கும் அன்னையும், பிதாவும் ஆகின்றனர். இதனால் முன்னறி தெய்வமாகிய பெற்றோர் அம்மையும், அப்பனுமாய் இருத்தல்போலவே, பின்னறி தெய்வமாகிய கடவுளும், அம்மையும், அப்பனுமாய் இருத்தல் தெளிவாகின்றது. இந்த அம்மையப்பர் வடிவமே அர்த்த நாரீசுவர வடிவம்.

"அம்மையப்ப ரேஉலகுக் கம்மையப்பர்"

என்பது திருக்களிற்றுப்பாடியார். இறைவனே, "அப்பன் நீ, அம்மை நீ" என்கின்றார் திருநாவுக்கரசர். இவற்றால் உலகிற்கு 'அன்னையாய் இருப்பவனும் அவனே; தந்தையாய் இருப்பவனும் அவனே, அஃதாவது, சத்தியும், சிவமும் இருவரல்லர்; ஒருவரே' என்பது விளங்கும். இவ்வாறு இருக்கவும் சிலர், 'சத்திதான்

முதல்' என்கின்றூர்கள்; சிலர், 'சிவம்தான் முதல்' என்கின்றூர்கள். இவர்களைக் கருதியே தாயுமானவர்,

"அன்னே அனேஎனும் சிலசமயம்; நின்னையே
ஐயாஐ யா என்னவே
அலறிடும் சில சமயம்"

என்று கூறுகின்றூர். இம்முரண்பாடுகளெல்லாம்,

"சிவம்சத்தி தன்னை யீன்றும்
சத்திதான் சிவத்தை யீன்றும்
உவந்திரு வரும்பு ணர்ந்திங்
குலகுயி ரெல்லா மீன்றும்
பவன்பிரம சாரி யாகும்;
பான்மொழி கன்னி யாகும்;
தவம்தரு ஞானத் தோர்க்கித்
தன்மைதான் தெரியு மன்றே"
(சிவஞானசித்தியார்.)

என்பது முதலியவற்றின் நுட்பங்களை உணரும்பொழுது நீங்கி விடும் என்பது அவரது கருத்து.

மக்களைப்பெற்று வளர்ப்பதில் தாயும், தந்தையும் ஒரு தன்மையானவர்களே. எனினும் தாய்க்குச் சிறிது ஏற்றம் உண்டு. அது, வயிற்றில் கருக்கொண்டு சுமந்து பெறுவதும், பெற்ற பின்னும் நீங்காது உடனிருந்து தன்பாலை ஊட்டி, கண்ணை இமை காப்பதுபோல் காத்து, வேண்டுவன யாவும் செய்வதும் போன்றவைதாம் அச்சிறப்பு. இதனுல், தந்தை அன்பைவிடத் தாய் அன்பு சிறப்புடையதாய்க் காணப்படுகின்றது. தந்தை அன்பு சில சமயங்களில் வன்செயலாக வெளிப்படுவதும் உண்டு தாய் அன்பு அவ்வாறில்லாமல் எப்பொழுதும் இன்செயலாகவே வெளிப்படும். இது பற்றியே இறைவனது கருணையைக் குறிப்பிடும் இடங்களில்,

"தாயிற் சிறந்த தயாவான தத்துவனே"

என்றும்,

"பால்நினைந் தூட்டும் தாயினும் சாலப் பரிந்து"

என்றும் பெரியோர் கூறுகின்றனர். தாய் தந்தை இருவரையும் குறிப்பிடுமிடத்திலும் தாயை முன்னே குறிப்பிடுவதுதான் முறையாய் உள்ளது. ''அம்மையே அப்பா ஒப்பிலா மணியே' என்றுதான் திருவாசகமும் கூறுகின்றது. "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்'' என்பதிலும் அன்னையைத்தான் ஔவையாரும் முன்னே கூறியுள்ளார். தாய் தந்தை இருவரிலும் குழந்தை முன்னே அறிவது தாயைத்தானே? ஞானசம்பந்தரும் திருத் தோணியப்பர் சிகரம்பார்த்து, ஈசர்கழல் முறைபுரிந்த முன் உணர்வு மூள அழத் தொடங்கியபொழுதும், "அம்மே அப்பா'' என்று, அம்மையைத்தான் முதலில் அழைத்தார். ''அம்மையப்பரே உலகுக்கு அம்மையப்பர்'' என்ற திருக்களிற்றுப்படியாரிலும், அம்மை முன்நிற்பதை முன்னே பார்த்தோம். இவ்வாறே தாயுமான அடிகளும் இறைவனை உலகன்னை வடிவான எந்தையே'' என்று பாராட்டுகின்ற ஒரு பாடலே, முதலில் தரப் பட்டது.

அவர் பெயரே தாயுமானவர். தந்தையாய்மட்டும் இல்லாமல், தாயும் ஆன பெருமான் எழுந்தருளியுள்ள திருச்சிராப் பள்ளியில் அப்பெருமானது திருவருளால் தோன்றி அவனது பெயரையே பெற்று வளர்ந்து, அத்தலத்திலே மௌன குருவின் அருளால் ஞானம் பெற்று, சிரகிரியாகிய அம்மலையின் மேல் விளங்கும் தட்சிணாமூர்த்தியின் திருமுன்பில் பலநாள் நிட்டை கூடி இருந்தவர் அவர். அதனால் 'சின்மயானந்த குரு' என்னும் தலைப்பில் பதினொரு பாடல்களை அவர் அருளிச் செய்தார். அவைகளில் ஒன்றே அப்பாடல்.

தாய் என்ன செய்கின்றாள்? முதலில் குழந்தையைப் பெறுகின்றாள். பின்னர் அணையாடை, தொட்டில் முதலிய பாதுகாப்பில் வைத்துப் பால் ஊட்டி வளர்க்கின்றாள். சிறிது வளர்ந்த பொழுது வீட்டிலும், தெருவிலும் விளையாடவிட்டுப் பார்த்துக் களிக்கின்றாள். விளையாட விடும் பொழுது சில புத்தி மதிகளைச் சொல்லியனுப்பி, குழந்தை அதன்படி இல் லாமல் தவறு செய்யுமாயின், அச்சம் தரும் தோற்றத்தை யுடைய யாரையேனும் கொண்டு அச்சுறுத்தவும் - சில சமயங்களில் சிறிது அடிக்கவும் செய்கின்றாள். அதனால் அக்

குழந்தை விளையாடும் இடத்தைவிட்டுத் தன்னிடம் ஓடிவந்து அழும்பொழுது அதற்கு வேண்டுவன கொடுத்து அமைதி உண்டாக்கி உணவளித்து இன்பமாக உறங்கச் செய்கின்றாள். 'இறைவனும் உயிர்களை இப்படித்தான் வளர்க்கின்றான்' என்று தாயுமானவர் விளக்குகின்றார்.

உயிர்கள் அனாதியே ஆணவமலத்தால் கட்டுண்டு கிடக்கின்றன. கண்ணை மறைக்கும் இருள் போல, உயிர்களின் அறிவை அடியோடு மறைத்து நிற்கும் அக இருளே ஆணவ மலம். ஆகவே, அந்நிலையில் உயிர்கள் இருள்செறிந்த கருப்பையில் அகப்பட்டுக் கண் திறவாது அறிவும் இல்லாதிருக்கின்ற குழந்தையைப் போல்வனவாய் இருக்கும்' என்கின்றார் தாயுமானவர். இவ்வுபமானத்தால் இந்நிலை எவ்வளவு துன்பமானது என்பது விளங்கும். இத்துன்பநிலை 'கேவலம்' எனப்படும்.

நாம் எல்லோருமே இந்நிலையில் இருந்தவர்கள் தாம். அதனால், 'காரிட்ட ஆணவக் கருவறையில் அறிவற்ற கண்ணிலாக் குழவியைப் போற் கட்டுண்டிருந்த எமை' என்கின்றார். கார் - இருள். கருவறை கருப்பை. இதுவும் இறைவனது வியாபகத்திற்குள்ளேயாகலின், இந்நிலையில் இறைவன் கருவைத் தாங்குகின்ற தாய் போன்றவனாகின்றான்.

ஆணவ மலத்தில் அழுந்தித் துன்பப்பட்டுக் கொண்டிருந்த உயிர்களுக்கு இறைவன் பற்பல உடம்புகளைக் கொடுத்துச் சிறிது அறிவை உண்டாக்கி உலகில் வரச் செய்தான். இதனை, 'வெளியில் விட்டு' என்று குறிப்பிடுகின்றார். இதுவே, தாய் குழந்தையைப் பெறுதல் போன்றது. பிறவியை அடைந்த உயிருக்கு உடம்பே பாதுகாவல். உடம்பை, 'அல்லல்' என்று சொல்லி, 'அல்லலாம் காப்பிட்டு' என்றார்.

அதற்கிசைந்த பேர், மக்கள், விலங்கு, பறவை முதலியன. தாய்தந்தையரும் குழந்தைக்குப் பெயர் இடுகின்றனரன்றோ! தாய் தந்தையர், பால் முதலிய உணவை ஊட்டுகின்றனர்; இறைவன் வினைப்பயனை ஊட்டுகின்றான் என்பதை 'வினைஅமுதம் ஊட்டி' என்று கூறினார். வினைக்கீடாகப் பல உலகங்களில்

சென்று பிறந்தும் இறந்தும் வருவதே உயிர்களாகிய குழந்தை களின் விளையாட்டு; இதனைக் கண்டு கொண்டிருக்கிறான் இறைவன். அவன் சொல்லியவை வேதம் முதலிய உண்மை நூல்கள். அவற்றில் சொல்லப்பட்டபடி நடவாத பொழுது, 'யமன்' என்பவனை விட்டு அச்சுறுத்தி ஒறுக்கின்றான். இந் நிலை 'சகலம்' எனப்படும். அவ்வொறுப்பினால் திருந்திய பின் னர் பிறவியாகிய துன்பத்தை நீக்கி, இரவு பகல் அற்ற பேரின்பமாகிய வீட்டில் உயிர்களாகிய குழந்தைகளை இன்ப மாக உறங்கச் செய்கின்றான். இந்நிலை, 'சுத்தம்' எனப்படும். இவ்வாறு இறைவன் உலகுயிர்கள் அனைத்திற்கும் அன்னையா கின்றான் என்பதை நிறுவுகின்றார் தாயுமானவர்.

இறைவன் தாய் மட்டும் அல்லன்; தந்தையுந்தானே? அதனால் 'சிரிட்ட உலகன்னை வடிவான எந்தையே' என்று அழைத்துப் பாராட்டுகின்றார். இங்குக் கூறிய முறையும் முத்தி நிலையும் சைவசித்தாந்தத்தின் உண்மைகளேயாதலும், இம் முறையில் இம்முத்தியை அருளுவது சிவபெருமானேயாதலும் பற்றி, 'சித் தாந்த முத்தி முதலே' என்றும் வரையறுத்து அருளினார். சித்தாந் தத்தின் விரிந்தபல கருத்துக்களை அழகான ஒரு முறையில் சுருக்கமாக இங்கு இவர் அருளியிருத்தல் வியத்தற்குரியது.

ஞான முதல்வனாகிய தட்சிணாமூர்த்தியிடம் விண்ணப்பிக் கின்ற இப்பகுதியில் இதன் பின் மற்றும் பல வகையில் அவர் விளக்கும் சித்தாந்தக் கருத்துகள் பல, 'ஆன்மாவாகிய செம் பில் ஆணவமாகிய களிம்பு நீங்க இறைவனாகிய இரசவாதி தனது அருளாகிய குளிகையைச் சேர்த்துப் பொன்னாக்குகிறான். ஆன்மாக்களின் அறிவை மறைப்பதும் அவன் அருள்; விளக்கு வதும் அவன் அருள். அவனது அருளால் பெறும் முத்தி, உலகில் காணப்படும் எல்லா நிலைகளையும் கடந்த ஒன்று. அதைத் தருவது ஞானம் ஒன்றே. ஞானம் இல்லாமல் செய் கின்ற தானம், தவம், யாத்திரை முதலியன பயன்படமாட்டா. ஞானம் நிலைப்பதற்கு இறைவனது அருளைத்தான் துணையாகப் பற்ற வேண்டும் என்பவற்றை எல்லாம் விரிவாக எடுத்து விளக்கியுள்ளார்,

தொடக்கத்தில் சனகாதி நால்வர்க்கு அருளிய நிலையை நினைந்து, அம் முனிவர்களைப்போலத் தம்மையும் ஆட்கொள்ளும் படி வேண்டினர். 'சனகாதியர் போன்ற ஞானிகள் அடைந்த பேரின்பத்தை யானும் அடைய விரும்புவது, முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைபட்டதுபோல' என்கின்ற அவரது அருள் வேட்கை இங்கே காணப்படுகிறது. 'என் உள்ளத்தில் பொறாமை ஆசை முதலியவை இருப்பதால் நீ இருப்பதற்கு இடமில்லை என்றால், 'பரிபூரணன்' என்ற உனது பெயர் என்னாகும், என்பதும், 'எல்லாவற்றையும் உண்டாக்கிய நீ, நான் உன்னை அடைவதற்கு உரிய வழியை மாத்திரம் உண்டாக்க வில்லையோ' என்பதும் அவர் கூறும் சில நய உரைகள். 'உனது திருவருள் கிடைப்பதற்குமுன் இவ்வுலகில், நன்றாக உண்பது, உடுப்பது முதலியவை தாம் இன்பம் என்று நினைத்திருந்தேன்; உனது அருள்வந்து வாய்த்த உடன், இவை பற்றிய எண்ணங்கள் போனவழி தெரியவில்லை' என்று அவர் கூறுவதிலிருந்து அவரது உண்மைநிலை இன்னதென்பது நன்கு விளங்குகின்றது.

இத் திருப்பாடல்களை ஓதி உணர்வார்க்குச் சித்தாந்த ஞானம் எளிதின் விளங்கிச் சித்தாந்த முத்தியும் கூடுவதாகும்.

---

# HYMNS OF THE TAMIL SAIVITE SAINTS

BY

F. KINGSBURY, B. A. (Madras)

AND

G. E. PHILLIPS, B. A. (Lond.), M. A. (Oxon.)

---

[மலர் 18, இதழ் 2-ன் தொடர்ச்சி]

III

## SUNDARAMURTI SWAMI

(Abbreviated as SUNDARAR)

78. மிடுக்கில்லாதானைவீமனேவிறல்விசயனேவில்லுக்கி
வனென்று
கொடுக்கிலாதானைப்பாரியேயென்றுகூறினுங்கொ
டுப்பாரிலை
பொடிக்கொள்மேனியெம்புண்ணியன்புகலூரைப்
பாடுமின்புலவீர்காள்
அடுக்குமேலமருலகமாள்வதற்கியாதுமையுற
வில்லையே.

78. Call the weak by Bhima's name,
Style him Arjun with his bow,
Give the mean man Pari's fame,
Not a gift will he bestow.
Sing, O bards, our holy God,
White with ash, in Puhalur.
In the deathless one's abode
Ye shall reign for evermore.

(To be continued)

---

# துன்பக் கடல்

திருமதி. அனந்தலக்ஷ்மி சுப்ரமணியம் அவர்கள், M.A., B.T.,
5, விநாயகமுதலி தெரு, சென்னை-1.

ஆழிசூழ் உலகில் அரும் பெரும் பிறப்பு எடுத்த மனிதன் உணர்ச்சியின் கொள்கலம். நல்லதையும் இன்பத்தையும் கண்ட மாத்திரத்திலே கை கொட்டி ஆர்ப்பரித்து இன்பக் கொள்கலமாய் மகிழ்ச்சிக் கடலில் திளைக்கிறான். தன் கனவெல்லாம் மண்ணாகி - இன்பத்திற்கு இடையே துன்பம் பெற்றாலோ – தலையில் கை வைத்து வருந்தி வாடி நிற்கிறான். மேலும், பிடியாதவற்றைக் கண்டால் அருவருப்பு, அவமதித்தாரைக் கண்டு ஒரு துடிதுடிப்பு - இப்படி எத்தனை எத்தனையோ உணர்ச்சிகள்; இந்த உணர்ச்சிகள் யாவும் நம் எண்ணங்கள் மாற மாற, சூழ்நிலை மாற, மாற மாறிக்கொண்டே போகும். இந்த ஒப்பற்ற உணர்ச்சிகளிற்கு - நிலையில்லாத ஒன்றிற்கு வடிவம் கொடுத்து - வாழவைக்கிறான் கவிஞன். அவனுடைய உணர்ச்சிப் பாடல்கள்,பல்லாண்டுகள் கழித்தும் உணர்ச்சியைக் கிளறுகின்றன. நாம், நம் புத்தாடை களுக்கு மணம் ஊட்ட வாசனையைத் தெளிக்கிறோம். மணம் மிகு மகிழம் பூவையும், தன்மணம் குறையா தாழையையும் பெட்டியில் போட்டு வைக்கிறோம். அதேபோல் கவிஞன் உணர்ச்சி எனும் மணமிகு பொருளில் கருத்துக்கொண்ட சொற்களைத் தோய்த்து எடுக்கிறான். அதன் பலன், பேழையை திறக்கும் போதெல்லாம் மணம் நிரப்புவது போல், கவிதையினைப் படிக்கும் போதெல்லாம் கவிஞனாய் மாறி உணர்ச்சியின் எல்லையில் நிற்கிறோம்.

உணர்ச்சியைக் கொட்டி, விழுமிய பாடல் செய்வதில் வல்லவனாய் வாழ்ந்திருந்தான் வான் உயர் கம்பன். என்றுமே இன்பப்பாடலைவிட சோகத்தின் இருப்பிடமாய் நிற்கும் பாடலைக்

கண்டு உள்ளம் குழைவான் மனிதன். இவ்வுண்மை நன் குணர்ந்த நம்பெரு புலவனும், துன்பத்திற்கு உறைவிடமாய் விளங்கும் பாடலை அமைத்து, நம் உள்ளத்தை உருக்குகிருன். அத்தகைய கண்ணீர் சிந்த வைக்கும் சிறந்ததோர் பாடல் களில் சிலவற்றை நாம் காண்போம்.

எதைக் கொண்டாலும் தீயார் நட்புக் கொளல் தீது, என்று உலகம் உணரும். ஆனல் கொள்ளற்கரிய தீயார் நட்பைக் கொண்டு வாழ்ந்தாள் கைகேயி. தாமரைத் தடாகத்தில் ஆழம் தெரியாது கால் விட்டவனைத் தண்டு பின்னிப் பிணைத்து குளத் தினுள் அமிழ்த்தல் போல, தன்னையறியாமல் கூனியின் மாய வலைக்குள் சிக்கிக் கொண்டாள் கைகேயி. அதன் பலன்? "விரா வரும் புவிக்கு எல்லாம் வேதமே ஆன இராமனைப் பயந்த எற்கு இடர் உண்டோ?" என வினவி மாலையைக் கூனிக்கு அளித்தவள் சிறிது நேரத்திற்குள், "நம்பியை நளிர்முடி சூட்டல்; துன்று கானத்தில் இராமனைத் துரத்தல்; இவ்விரண்டும் அன்றதாம் எனில் அரசன் முன் ஆருயிர் துறந்துவிட" சபதம் பூண்டாள்.

அப்பொழுது இன்பத்தில் சூழ்ந்திருந்த அயோத்தியில் இருள் சூழத் தொடங்கிவிட்டது. அந்த புரத்தில் நீதி தெய்வம் விடைபெற்றுக் கொண்டு விட்டது: இன்பம் சிறகொடிந்து விட்டது. துன்பம் வாழத் தொடங்க, இருள் எனும் தலைவி தன்னுல் உலகை மூடிவிட்டாள். சற்றுவரை தன்னைவிட சிறந் தோனில்லை என்ற இறுமாப்புடன் தலை நிமிர்ந்து நின்றிருந்த தசரதன், பஞ்சையாய், பச்சைக் குழந்தையாய் மாறிவிட்டான் கண நேரத்தில். நா உலர, உயிர் ஓட உள்ளம் புலர, வேதனை முற்றிட வெந்து வெந்து கொல்லன் ஊதுலையின் கனல் என்ன வெய்துயிர்த்தான். இவன் வாடிய நிலையை – அவன் துடித்த காட்சியைக் கம்பன் சொல்லாலே கேட்போம்.

"பெண் என உட்கும்; பெரும் பழிக்கு நாணும்
உள் நிறை வெப்போடு உயிர்த்து உயிர்த்து உலாவும்
கண்ணிலன் ஒப்ப அயர்க்கும் — வன் கைவேல் வெம்
புண் நுழைகிற் உழைக்கும் ஆனை போல்வான்."

(கைகேயி சூழ்வினை படலம்).

இப்படி அலமந்து நிற்பவன் கைகள், துடிக்கின்றன, சொன்ன வளின் கழுத்தை நெறிக்க. அப்பொழுது அவன் அறிவுக்கும் பாசத்திற்கும் போராட்டம் நடக்கிறது. இந்தப் போராட்டத்தில் அறிவிற்கே வெற்றி! தன் மகன்பொருட்டு பெண்பழி ஏற்றல் பாவமில்லையா? இதனால் குடிக்கே-பல்லாயிரம் ஆண்டு பழம் பெருமை கொண்ட குடியாயிற்றே! இதற்கு ஒரு களங்கம் ஏற் படலாமா? சந்திரனுக்கு உள்ள களங்கம் இரவிக்கு இல்லையே! அப்படியிருக்க, இரவியின் குலத்தோர் மட்டும், மாசுபடிந்து நிற்கலாமா? இப்படி ஓடுகிறது அவன் சிந்தனை.

இதன் காரணமாக, கண்ணின் இன்பத்தை அனுபவித்தான் கண்ணை இழந்து தடுமாறுவதுபோல் தடுமாறுகிறான்! பல்லோர் கல்வியில் மேம்பட்டோர், உற்றோர், மேதினியில் மேம்பட்டோர் கூடியிருக்கும் சபைதனிலே திரணமென, நீதியை நிலைநாட்டி வந்தவன், இன்று தனக்கென நீதியை வாழச் செய்யத் தெரி யாது தடுமாறுகிறான். உற்ற மனைவிக்குக் கொடுத்த வாக்கை மெய்ப்பிப்பது நீதியென்றால், பெற்ற மகனுக்கு அரசுரிமை அளித்திடுதல் அரச நீதியல்லவா? கொண்ட மனைவிக்கு நன்றிக்கடன் தீர்க்க கொடுத்த வாக்கைக் காப்பாற்ற, உற்ற மகனை - உயர் தனி மகனைக் கானகத்தனுப்பி உலகை பாழாக்கு வது நீதியின் இலக்கணமா? இப்படித்தான் அயோத்தி மன் னனின் கலங்கிய மனம் சிந்திக்கிறது.

பெண் என்றால் இரக்கத்திற்கு இருப்பிடம் என்பார்களே! சோகத்தைக் கண்டால்-துன்பத்தைப் பார்த்தால்-கல் கரையுமோ கரையாதோ? பெண் நிச்சயம் கரைந்து கண்ணீர் விடுவாளே! வாடிநிற்கும் உயிரைக்கண்டு வதங்கி விடுவதல்லவா பெண் உள்ளம். இப்படியிருக்க, பெண்தானே கைகேயி, அவளைக் கண்டு கதறினால் அவள் உள்ளம் கலங்காமல் போய்விடுமா? இப்படி ஓடுகிறது அவன் சிந்தனை. அதன் பலனாக, பேரும் யானைப் படையெல்லாம் தனக்கெனக் கொண்ட கழல் வேந்தர் பணியும் கழல் உடையான், நெடுஞ்சாண் கிடையாக ஒரு பெண்ணின் காலில் விழ்ந்தான். விழ்ந்ததும் மட்டும் போதாது. பெண்ணைவிடக் கேடாக கெஞ்சுகிறான், பரிதவிக்கிறான். அவன் "உனக்கு நிலம் தருகிறேன், பொருள் தருகிறேன்; இப்பூவுல

கம் ஆளும் பெரும் சிறப்பை நீயே பெற்றுக்கொள். ஆனால் என்மகனை மட்டும் காட்டுக்குப் போகச்சொல்லாதே; எனக்கு ஆட்சி வேண்டாம், பதவி வேண்டாம், போகம் வேண்டாம்; எனக்கு வேண்டிய செல்வம் அவன் ஒருத்தன் தான். நாடு வேண்டுவதும் அவனைத்தான். அரசனாக இல்லாவிட்டாலும், எனக்கு மகனாக, குடிக்கு உற்ற நண்பனாக வாழ மட்டும் அனுமதி கொடு'' என்று பிச்சைக்காரன் போல், செல்வந்தர் முன் ஏழைபோல், கற்றார் முன் கல்லார் போல் தலைவணங்கி பதறி கெஞ்சுகிறான் மண ஆண்ட மாதவத்தான்.

''கண்ணே வேண்டும்'' என்னினும் ஈயக் கடவேன், என்
உள்நேர் ஆவிவேண்டினும், இன்றே உனதுஅன்றோ?
பெண்ணே; வண்மைக் கேகயன்மானே! — பெறுவாயேல்
மண்ணே கொள்நீ: மற்றைய தொன்றும் மற.''

கம்பன் வாய்ச் சொல் வழியாக, தசரதன் கெஞ்சுவதைக் கண்டு அதிர்ந்து நிற்கிறோம்; பல்லோர் தலையைக் களத்தில் உருட்டி, யாவரையும் அஞ்சச் செய்பவன் ஒருசொல்-அவச்சொல் சொல்லக்கூட அஞ்சுகிறான். இராமனைக் காட்டுக்கு அனுப்புவதா? இதைப் பற்றி சிந்திப்பதா? இதுவே அவனுக்கு அச்சம் தருகிறது. அந்த கெடுசொல்,தானிருக்கும் வரை தன் வாயினின்று வருவதா? இச்சொல் சொல்வதற்கு முன் நானே இறந்து விடலாமே; என்றெல்லாம் எண்ணி புழுங்குபவன், மற்றையதொன்றும் மற'' என்று கெஞ்சுகிறான். ''என் கண்ணைக் கேள், நான் தருகிறேன். கண்ணை விடச் சிறந்த உயிர் வேண்டுமா? அதை நீ எதற்குக் கேட்க வேண்டும்! உன்னுடைய பொருளை யாரிடம் கேட்க வேண்டும்! அது போதாதா, நாடு வேண்டுமா? தருகிறேன். ஆனால் தயவு செய்து மற்றது மட்டும் கேட்காதே; என்காதில் படும்படி கேட்காதே'' என்று காலில் விழுந்து புரள்கிறான்; மகனுக்காக, இரவலர்க்கு வாரி வழங்குபவன் இரந்து நிற்கின்றான். இதனை விட கொடுமை உலகத்தில் உண்டா?

கெஞ்சி நிற்பவனுக்கு என்ன செய்வது என்றே வழி தெரியவில்லை. இராமன் சேதுவைக் கடக்க, குரங்குகள் கடலில் எறிந்த கல்போல், என்ன என்ன சொன்னாலும், பயனில்லை. சரி, 'பெண் என்றால் போகத்திற்கு இருப்பிடம்தானே'. ''உனக்கு

நாடு தரேன்; பொருள் எல்லாம் தரேன்; உன் மகன் ஆள்வான்'' என்று சொல்லிப் பார்த்தால் கொஞ்சம் கனிவாளா? பெண் தன்னைவிட யாரும் சிறந்து இருக்கக் கூடாது என்று நினைப் பாள் இல்லையா? அப்படியானால் "நான் உனக்கு மிகவும் தாழ்ந் தவன்; நீ உன் மகன் ஆள, பட்டத்து அரசியாய் வாழ்ந்திடு வாய். உனக்கு அரும்பெரும் ஆட்சி இருக்க, நாடே தலை வணங்க, நான் முடிதுறந்து இருப்பேன். என் மகன் ஒருவனே எனக்கு ஒப்பற்ற செல்வம் அதைக் கொடுக்கக் கெஞ்சுகிறேன்'' என்று மாநிலமாண்ட மன்னவன் கெஞ்சினால், "தலைச் செருக் குடைய பெண, பாவம், என்று இரங்கி தரமாட்டாளா'' என்று நினைத்து திரும்பவும் இரக்கின்றான்.

"நின்மகன் ஆள்வான் நீ இனிது ஆள்வாய்; நிலம் எல்லாம்
உன்வயம் ஆமே; ஆளுதி தந்தேன் உரைகுன்றேன்
என்மகன் என்கண், என்உயிர், எல்லா உயிர்கட்கும்
நன்மகன், இந்தநாடு இரவாமைநய'' என்றான்.

இப்படியெல்லாம் முதுமை காலத்தில் பச்சைக் குழந்தைபோல் கெஞ்சியும் பயனில்லை. தீமை அழியும் முன் நன்மையைத் துரத்தியடித்த பின்புதானே மடிகிறது? இவ்வளவு கெஞ்சியும் பயனில்லை. நெருஞ்சிக் காட்டில் நடப்பவன் போல், உள்ள மெல்லாம் சல்லடைக் கண்ணாகமாற வாய்மையெனும் பெயரிலே வஞ்சனை கொடிகட்டிப் பறக்க, நீதியெனும் பெயரிலே, நீதியைக் கொல்ல, கைகேயி முனைந்தாள். கடைசியில் வென்றாள். பாயும் கனலே போல், எறிந்தே ஆறாதே இன்னுயிர் உண்ணும் உயிர் அன்னவளாம் கைகேயி "உயிர்விடுவேன்'' என மிரட்டினாள்.

வளைந்த மூங்கிலை நிமிர்த்தலாம், பாய் புலியைப் பூனையாய் வளர்க்கலாம். ஆனால்....? கைகேயி மனதை மாற்ற முடியாது என்பதுணர்ந்து சோர்ந்து,

"ஈந்தேன் ஈந்தேன் இவ்வரம், என்சேய் வனம்ஆள
மாய்ந்தே நான்போய் வான்உலகு ஆள்வேன்; வசைவெள்ளம்
நீந்தாய் நீந்தாய்; நின்மகனோடும் நெடிது'' என்றான்.

இவ்வாறு தன் சேய் வனம்ஆளும் என்ற சொல் கூறிய மாத்திரமே, அவனுயிர், அவனை நீங்கத் தொடங்கியது.

அதனால்தான் அவன் - உயிர் துடித்துக் கொண்டிருந்த உயிர் - தத்தளித்த உயிர், சுமந்திரன் "கானகத்திற்குத் தானும், தன் தம்பியும், சனகன் மகளும் போய்விட்டனர்" என்று சொன்ன மாத்திரத்தில் உயிரை விடுத்தான்.

> நாயகன் பின்னும் தன் தேர்ப்பாகனை நோக்கி, "நம்பி
> சேயனோ? அணியனோ" என்று உரைத்தலும், தேர்வலானும்
> வேய்உயர் கானில் தானும் தன்தம்பியும் மிதிலைப்பொன்னும்
> போயினன்" என்றான். என்ற போழ்தத்தே ஆவிபோனான்.

என்று கூறும் கம்பன், சோகச் சுமையில் அழுந்திய மன்னன், பாசத்தின் பிணிப்பில் பரிதவித்த மன்னன் தன்மகன் கொடியார் வாழும் நாட்டில் வாழ்வதைவிட, கானகத்தில் - புலிவாழ்கானில் வாழ்தலே சிறந்தது என்று கருதி மன்னவன் மனநிம்மதியுடன் உயிர் விட்டான். பாசத்திற்கும் கடமைக்கும் இடையில் சிக்கி நின்ற உயிர், பாசம், பந்தம், கொடுமை, நன்மை தீமை இவற்றிற்கெல்லாம் அப்பாற்பட்ட உலகிற்குச் சென்று விட்டது.

இது கம்பன்ச் சித்திரத்தில் காணப்படும் ஒரு அவலக்காட்சி இதனையாக்கும் கம்பன் தானே தனயனை இழந்த தந்தையாய் மாறி அலமந்து நிற்கிறான். அவனே தசரதனாய் மாறி விடுகிறான். இதனால் இவன் காவியத்தோடு ஒன்றும் நாமும் இராமனைப் பிரிந்து சிந்திக்கிறோம். ஆனால் உயர்தனிச் சீதையையும் பொறுமைக்கோர் கோசலையினையும் கண்டவுடன் "சந்திரனுக்குக் களங்கம் இல்லையா; அதுபோல் பெண்குலத்திற்கோர் கைகேயி" என்று எண்ணுகிறோம். நம் ஒப்பற்ற கவிஞனும் தன் கடமையை முடித்த உணர்ச்சியுடன் நம்மிடம் இருந்து விடைபெருகிறான். தன் காவிய மாந்தரை கற்றவர் உள்ளத்தில் வாழவைப்பது கவிஞன் கடன்தானே? கடமை செய்த கவிஞனைக் கண்டு மலைத்து நின்று பெருமைப்படுகிறோம்.



உ

திருச்செந்திலாண்டவன் துணை

# திருவாசக அநுபூதி உரை*

(சீகாழித் தாண்டவராயர் அவர்கள் இயற்றியது)

திருச்சிற்றம்பலம்

## கோயில் மூத்த திருப்பதிகம்

இனி, அநாதியே முன்னின்ருண்டமைக் கூறும் (தி.-ன.) :-

முன்னின் ருண்டா யெனைமுன்ன
  மியானு மதுவே முயல்வுற்றுப்
பின்னின் றேவல் செய்கின் றேன்
  பிற்பட் டொழிந்தேன் பெம்மானே
என்னின் றருளி வரநின்று
  போந்தி டென்று விடிலடியார்
உன்னின் றிவனு ரென்றுரோ
  பொன்னம் பலக்கூத் துகந்தானே.

(இ - ள்). ஆண்டவனே! தேவரீர், மகாகேவலத்தில் திருவடியில் இருப்பதறியாதிருந்த என்னை, பெருங்கருணையினுல் அறிவு விளங்கச் செய்தது திருவருளமறியும்; அவை அருளெனத் தோன்ருது மலபந்தத்தால் யானெனது என, அவை கொண்டு, தாமே தருபவரை தம் வலியினுற் கருதினேன்; அவையுந் திருவருளே நடாத்துகின்ற முறையறியாது மயல்வுற்றபடியால் அடியார்கட்குப் புறமானேன். பெரிய பெருமானே! திருவடி எற்கேற்பக் காட்டி, என்னை அடிமை செய்ய அநுக்கிரகம் பொருந்துக; வழி மறித்து அருளாக்கி அழைப்பது, தேவரீர் கருணையலது வேறுளவோ? பராமுகமேயானுல், சீரடியார் இவ்வகையுடையவன் இப்பரிபாகக் கூட்டத்தில் அடியார் திருச்சபையில் எண்ணிக்கையில் அடியேனை வேருக்கிவிடக் கருதுவது திருவுளந்தானே? திருமன்றுளாடும் அம்பலவனே! திருச்சபை கணடவர்கட்குத் தீங்கில்லை; என்ற பழமொழியும் அடியேற்கில்லையோ? சுவாமி! என வருளியதைக் காண்க.

---

* இவ்வரிய நூலைப் பதிப்பித்த சென்னை-திருவான்மியூர், மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள் நூல் நிலையத்தாரின் அனுமதிபெற்று இது வெளியிடப் பெறுகின்றது. இதன் விலை ரூ. 18/- டி நூல் நிலையத்தில் கிடைக்கும், 20% கழிவு உண்டு.

# சிறியேம் சிற்றில் சிதையேலே!

திரு. க. இராசேந்திரன் அவர்கள்,
'முருகன் நிலையம்',
சென்னை – 24.

---

ஆற்றிலே புதுவெள்ளம் பெருக்கெடுத்து ஓடுகிறது. எக்களிக்கும் மறிதிரைகள் ஈரமணலை ஏராளமாய்க் கரையிலே சேர்த்துச் செல்கின்றன. இளஞ்சிறுர்தம் உள்ளத்திலோ பெருங் களிப்புக் கூத்தாடுகிறது. சிறுமியர் அத்தண்ணிய துறையில் உள்ள ஈரமணலைத் தமது மலர்க் கைகளால் கொழித்து மணல் வீடு கட்டுகிறுர்கள். தமது கற்பனைத் திறத்தை யெல்லாம் கூட்டிப் பெருமுயற்சியுடன் சிற்றிலிழைத்து விளையாடுகிறுர்கள். அச்சிறு மனைகளின் மீது சங்குகளையும், கழுவப்பெருத முத்துக் களையும் பதித்திருக்கிறுர்கள். அவர்கள் அச்சிற்றிலின் மேல் கொண்டுள்ள பற்று கொஞ்ச நஞ்சமா? அப்பப்பா! அது சொல்லி முடியாதது.

ஆனுல் அவ்வளவு முயற்சியுடன் அவர்கள் இழைத்த சிற்றில் நிலைத்து நிற்கவில்லையே! கிண் கிண் எனும் சதங்கை ஒலியுடன் ஓடிவரும் இருசீறடிகள் அச்சிற்றிலைப் பொக்கென ஓர் கணத்தே போகச் சிதைக்கின்றனவே!

சிறுமியர்களின் அழகிய விழிகளில் அனல் பறக்கிறது; சினத்துடன் நிமிர்ந்து நோக்குகிறுர்கள். எதிரே சிற்றிலைச் சிதைத்ததுமல்லாமல் சிரித்தும் நிற்கிருன் செவ்வேள். செய்வ தறியாது மயங்கி நிற்கிறுர்கள் சிறுமிகள். அவனே பெரிய வீட்டுப்பிள்ளை. "இருக்கட்டுமே! அவன், செஞ்சடையில் இள மதியைச் செருகும் சிவபிரானுக்கும், ஏழேழுலகங்களையும் படைத்த பராசக்திக்கும் செல்வ மகனுகத்தான் இருக்கட்டுமே! அதற்காக நாங்கள் ஆசை ஆசையாகக் கட்டிய சிற்றிலைச்

சிதைக்க வேண்டுமா என்ன? அப்படி அவன் செய்யும் சிறு குறும்புகளையெல்லாம் பொறுத்துக் கொள்ள வேண்டிய விதி யேதும் எங்கட்கு இல்லை,'' என்று செருக்குடன் பேசுகிறார்கள்.

"பிள்ளை மதிச் செஞ்சடைச் செருகும்
பெருமானுர்க்கும் உலகேழும்
பெற்ற தாய்க்கும் நீயருமைப்
பிள்ளையெ னினும்பேராய
வெள்ளம் அமைத்த சிறுசோறு
வேண்டினிடுகேம் அலதெளியேம்
விளையாடிடத் துச்சிறு குறும்பு
விளைத்தாற் பொறுக்க விதியுண்டோ?".

இவ்வுலகவியலிலே அழுந்தி இதுவே நிலையென நினைந் துழலும் உயிர்கள், இறைவனின் மறைத்தல் தொழிலின் விளை யாட்டை உணராத நிலையில் பேசும் பேதை மொழிகளை இது அப்படியே பிரதிபலிக்கவில்லையா? ஆனல் அவர்கள் அவ்வாறு பேசும் பேச்சுக்களுக்கும், ஏச்சுக்களுக்கும் இறைவன் காது கொடுப்பதில்லையே!

மகளிர் தமது சிற்றிலைச் செய்து முடிக்கும்வரை பொறுமை யோடிருக்கிருன் அவன். ஆனல் அவர்கள் அதனை இழைத்து முடித்து அதன் அழகைச் சிறிது நேரம்கூட அனுபவிக்க முடிவ தில்லையே! அதற்குள் காற்சலங்கைகள் ஒலிக்க வந்து விடு கிருனே அவன்! அவர்களும் என்னதான் செய்ய முடியும்! எத்தனை முறைகள் சிற்றிழைப்பினும் அவற்றைச் சிதைத்த படியே இருக்கிருனே! இனியும் அச்சிறுமியர் அவனுடன் போட்டியிட விரும்பவில்லை. அவர்கள் தங்களது செருக்கு நிலை யிலிருந்து இறங்கி வருகிருர்கள். சினத்தையெல்லாம் அடக்கிக் கொண்டு அந்தச் செவ்வேளிடம் அமைதியாகப் பேசுகிருர்கள்.

"கல்விச் செருக்கால் விளையாட்டுக்
களிப்புச் செருக்கால் சூர்தடிந்த
கடிய செருக்கால் சமன்பகையை
கடந்த செருக்கால் இளஞ்செருக்கால்
செல்வச் செருக்கால் மனச்செருக்கால்
சிறியேம் சிற்றில் சிதையேலே"

என்று பேசுகிருர்கள். மஞ்சட் காமாலேயென்னும் நோய் பிடித்தவனுக்கு அவன் காணும் பொருட்களெல்லாம் மஞ்சள் நிறமாகத்தான் தோன்றுமாம். அதுபோல்தான் இருக்கிறது இவர்கள் நிலேயும். மனச்செருக்கு மிகுந்துள்ள இவர்களுக்குத் தன்னேயே தான் எண்ணிப் பார்க்கும் மனப்பக்குவம் இன்னும் வரவில்லே. ஆனுல் தங்களிடம் உள்ள குற்றத்தை முருகன் மேல் ஏற்றிப் பேசுகிருர்கள். "முருகனிடம் செருக்கு மிகுந்திருக்கிறது. அது அவனது கண்களே மறைக்கிறது. அதனுல் தான் அவன் சிற்றில்களேச் சிதைத்துச் சிரிக்கிருன்", என்று அவர்கள் எண்ணுகிருர்கள். எண்ணி என்ன பயன்? வலிமை மிக்க அவனேத் தம் வயப்படுத்துதல் எளிதோ? பாவம்! அவர்களது பேச்சிலே முன்பிருந்த மிடுக்கு இப்போது இல்லே. "சிறியேம் சிற்றில் சிதையேலே", எனும் அவர்களது வேண்டுதவிலுலேயே இது விளக்கமாகத் தெரிகிறது. அவன் அவர்களுக்குத் தலேவன் என்பதை அவர்கள் உணர்ந்திருக்கிருர்கள்.

ஆனுல் முருகன் தனக்கு முழுவெற்றி வேண்டுமென்பதில் பிடிவாதமாயிருக்கிருன். அச்சிறுமியர் தங்களது ஆற்றலின்மையை முழுதும் உணர்ந்து அவனிடம் சரணடையும் வரை சிற்றிலேச் சிதைத்துச் சிவக்கின்றன செவ்வேளின் சீறடிகள். அவர்கள் பெரிதும் இறங்கி வந்து விட்டார்கள். இப்போது அவர்கள் முருகனிடம் சமரசம் பேசுகிருர்கள். சிற்றிலே அழிக்கும் அவனேயே அதனேக் காக்குமாறு வேண்டுகிருர்கள். "நாங்கள் எவ்வளவு ஆசையாக எங்களது பூக்கரங்கள் சிவக்கச் சிற்றில் இழைக்கிருேம். அவற்றை நொடிப்பொழுதில் நினது கால்களினுல் அழித்து விடுகிருயே! இதுவா உனது கடமை? இல்லேயே."

> "கையால் இழைத்த சிற்றிலேநின்
> காலால் அழித்தல் கடனலகாண்."

ஆனுல் நின்னுடைய கடமை அதனேக் காப்பது. எங்கட்குத் தோழனுக இருந்து அதைக் காக்க வேண்டிய நீயே அதனே அழிக்கத் தொடங்கினுல் யார்தான் அதனேக் காப்பது?", எனக் கெஞ்சுகிருர்கள்,

"காப்போன் அழிக்கத் தொடங்கிலெங்கள்
கவலை யெவரோ டினியுரைப்போம்"

என்று இறைஞ்சுகிறார்கள். இப்போது அவர்கள் அவனைத் தாங்கள் அரிதில் கட்டி முடித்த சிற்றிலைக் காக்கும் காவலனாக-கடவுளாக-உணர்கிறார்கள். "கருவீற்றிருந்த பெருங்கருணைக் கடவுள் நீயே", என்று அவன் தாளைத் தமது தலையில் தாங்கவும் சித்தமாகிறார்கள்; மேலும் சிந்திக்கிறார்கள்.

"ஒருவேளை குற்றம் அவன் மேலன்றி நம்மேல்தான் இருக்குமோ? நாமொன்றும் அப்படிப் பிழைசெய்ய வில்லையே!" என்று எண்ணுகிறார்கள். "இறைவா! நாங்கள் இங்ஙனம் சிற்றிலிழைத் தாடுதல் ஏதேனும் குற்றமுடையதோ? இல்லையென்று தான் தோன்றுகிறது. ஏனென்றால் நீ உனது பேராற்றலுக் கேற்ப அண்டங்களையெல்லாம் ஆக்குகிறாய். உனதடியார்களாகிய நாங்களோ எங்களது சக்திக்கேற்ப சிறுமனை அமைத்து மகிழ்கிறோம். எனவே இவ்விளையாட்டு உனது கருத்திற்கு மாறு பட்டதல்லவே?" என்று வினவுகிறார்கள்.

"கடவுள்நீயே பகிரண்டம்
கண்டாயெனின் வண்டடை கிடப்ப
மருவீற்றிருந்த குழன் மகளிர்
வண்டல்துறைக்கு மணற் சிற்றில்
மனைகோலுவது மற்றடிகேள்
வகுக்கும் தொழிற்கு மாறன்றே?"

ஆம்! அவன்தான் இவ்வுலகில் பிறந்துழலுமாறு வகுத்தளித்தவன். ஆனால் இப்பிறப்பின் வாயிலாக-இப்பிறப்பில் நாம் நுகரும் இன்பத் துன்பங்களின் வாயிலாக-நாம் நமது பொய்யறிவை நீக்கி, மெய்யறிவு பெறுதலன்றோ அவன் வகுத்தநெறி. அந்நெறியை உணர்ந்து நடவாமல் இவ்வுலகமே கதியென நினைந்து மயங்கியிருக்கும் மயக்க நிலையைத் தெளிவித்தல் பொருட்டன்றோ இறைவன் இன்ப துன்பங்களைத் தோற்றுவிக்கிறான்.

சிற்றிலை இழைக்கச் செய்து அழிக்கிறான்; சிற்றில்களைச் சிதைத்தலின் மூலமே சிறுமைகளையும் அழிக்கிறான். தமது

சிதைத்தல் தொழிலின் காரணத்தை சிந்திக்கச் செய்கிருன். தான் எப்போதும் வடிவேலினைக் கைக்கொண்டுள்ள இரகசியத்தை உணரச் செய்கிருன். அவ்வேல் சாமனியமானதா? 'புன்னீர் கவரும் வடிவேலாயிற்றே'. வேலின் தொழில் அழித்தல். அத்தகைய வேலினையுடைய வேலவனும் அழித்தல் தொழிலில் பெருவிருப்புடையவன் என்பது அவர்களுக்கு இப்போது நன்கு விளங்குகிறது. முன்பு அவனது சிதைத்தல் தொழிலின் மேல் சினங்கொண்ட அவர்களே, இப்போது அவனது அழித்தல் தொழிலைப் போற்றிப் பேசுகிருர்கள்.

"வேலவா! உயிர்கள் வீடுபேறு அடைதல் வேண்டிச் சொரியும் கண்ணீரை அழிக்கின்ற வேலினைக் கைக்கொண்டுள்ள நீ, அழித்தல் தொழிலில் பெருவிருப்புடையவன் என்பது புலனுகிறது. ஆதலின் நீ உனது விருப்பிற்குரிய அத்தொழிலை மேற்கொள். உன்னையே நினைந்து, நினைந்து, ஊற்றெழும் கண்ணீரதனுல் உடம்பு நனைந்து, நினைந்து நிற்கும் உனதடியார்களின் மாயை, கன்மம் ஆகிய மலங்களையெல்லாம் அறவே சிதை! அவர்கள் நிலைத்த இன்பத்தையடையத் தடையாக உள்ள அவர்களது முன்வினைகளையெல்லாம் சிதை! அவர்கள் மேலும் பிறவிக் கடலில் வீழ்ந்துத் துன்புறு வண்ணம் பிறவிக்கணக்கெழுதும் ஏட்டைச் சிதை! உனது தலைமையை உணராது, ஆணவ மலத்தில் அழுந்தியுள்ள எங்களது அவ்வெண்ணத்தைச் சிதை! என்று அவனை அச்சிதைத்தல் தொழிலில் ஊக்கப்படுத்துகிருர்கள்.

> "கண்ணீர் பெருக உருகியுள்ளம்
> கசிநின் னடியார் மலமாயா
> கன்மம் முழுதும் சிதை! அவர்தம்
> எண்ணீர்ப் பிறவிக் கணக்கெழுதும்
> ஏட்டைச் சிதை! நீயே பரம்என்று
> எண்ணுது இழுதையுறு முணகர்
> எண்ணம் சிதை! .... .... .... ...

இவற்றைச் சிதைப்பதின் மூலமாகவே எங்களுக்குப் பேரின்பப் பெருவழியைக் காட்டு," என்று பேசும் அவர்களது பேச்சிலே அவர்களது தெளிந்த மெய்யறிவு ஒளி வீசுகிறது. சிந்திப்பவர்

தமது உள்ளத்தில் ஊறுகின்ற அமுதத் தெளிவாக விளங்கும் இறைவனது சிதைத்தல் தொழிலின் காரணத்தைச் சிந்திக்கத் தொடங்கி விட்டார்கள் அவர்கள்.

மாயைக்கடலுள் மூழ்கியுள்ள உயிர்கள் கதறும்கதறல்களை யெல்லாம் இறைவன் கவனிப்பதேயில்லை. பற்றற்ற அப்பரம் பொருள் அவைகளுக்கு மேன்மேலும் துன்பத்தைக் கொடுத்துக் கொண்டேயிருக்கிருன். அவன் அத்துணைக் கல் நெஞ்சனு? அதுதான் இல்லை. அவன் கருணைப் பெருங்கடல். அவன் உயிர்களை அடுத்தடுத்துப் பிறவிக்கடலில் ஆழ்த்தி அலமரச் செய்கிருன் என்பது உண்மைதான். ஆனுல் அங்ஙனம் செய் தலின் மூலமாகவே உயிர்கள் மாயைச் சுழலினின்று நீங்கித் தமது உண்மை நிலையைச் சிந்திக்கச் செய்கிருன்; அவற்றினும் மேம்பட்ட தனிப்பொருள் ஒன்றிருப்பதை உணரச் செய்கிருன். இவ்வுலக வாழ்வில் கொண்டுள்ள பற்றை நீக்கிப், பேரின்பநிலை யடையும் வழியை அவைகளுக்குக் காட்டவே உயிர்களின் ஆசைகளை நிறைவேற்ருமல் காலந் தாழ்த்துகிருன்; கலங்கச் செய்கிருன்! இறைவனின் இவ்வருள் விளையாட்டின் திறத்தை உயிர்கள் முடிவில்தான் உணருகின்றன.

‘மண்ணுளே சிலவியாதி மருத்துவன் அருத்தியொடும்
திண்ணமாய் அறுத்துக் கீறித் தீர்த்திடும் சிலநோய் எல்லாம்
கண்ணிய கட்டிபாலும் கலந்துடன் கொடுத்துத் தீர்ப்பன்
அண்ணலும் இன்பதுன்பம் அருத்தியே வினையறுப்பன்,’

எனும் சிவஞான சித்தியாரின் தத்துவத்தை முருகன்மேல் பாடப் பட்டுள்ள பிள்ளைத்தமிழ் நூல்களில் உள்ள சிற்றிலழித்தல் பருவம் சிறப்புற விளக்குகிறதன்ருே?



சிவ சிவ

# திருப்புத்தூரில் ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் நினைவு நாள் அன்னம்பாலிப்பு நிதி ரூ 2500/-

"கடல் புனவாயில் குற்ருலம் அப்பனுர்
ஏடகம்நெல் வேலி யிராமேசம் — ஆடானை
தென்பரங்குன்றம் சுழியல் தென்திருப்புத் தூர்கானை
வன்கொடுங்குன் றம்பூ வணம்"

என்று எண்ணப்பட்ட பாண்டி நாட்டுப் பாடல் பெற்ற தலங் களுள் ஒன்ருயதும்,

திருஞானசம்பந்தராலும், திருநாவுக்கரசராலும் பதிகம் பாடப்பெற்றதும், இலக்குமி பூசை செய்தமையால் ஸ்ரீ தளி என்று திருக்கோயில் பெயர் பெறுவதும்,

கொன்றை மரமாகிப்பிரணவம் பூசித்த தலமாயதும்,

தாண்டவம் ஏழினுள் கௌரிதாண்டவத்தை இறைவன் அம்பிகைக்குக் காட்டியருளிய சிறப்புடையதும் ஆன திருப்புத்தூர் எனப்பெறும் பாண்டியநாட்டுத் திருத்தலத்தில் ஆண்டுதோறும் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் சிவப்பேறு எய்திய திருநாளில் அந் தணர், அருந்தவர், ஏழைகளுக்கு அன்னம் பாலித்தற்பொருட்டுத் திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்து அதிபர் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள் நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால் இந்நிதி நிறுவப்பெற்றது. இது 'திருப்புத்தூரில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுநாள் அன்னம் பாலிப்பு நிதி' எனப்பெறும்.

2. இதற்குரிய முதற்பொருள் ரூ. 2500/- இது ஆண் டொன்றுக்கு 7% வட்டி தரக்கூடிய நிலையான முதலீடாகக் கும்பகோணம் ஸ்டேட் பாங்கில் முதலீடு செய்யப்பெற்றுள்ளது. பிக்ச்ட் டிபாஸிட் நெ. 693172 – தேதி. 20—2—67 – மாதங் கள் 60. ரூ. 2500/- ரூபா இரண்டாயிரத்தைநூறு/ இது நம் மாலும் நமக்குப் பின் உரிமையுள்ளவர்களாலும் பரிபாலனஞ் செய்யப் பெற்று வரும்.

3. இராமேசுவரம் கன்னியாகுமரி திருச்செந்தூர்
ஸ்ரீவைகுண்டம் திருநெல்வேலி பழையபாவநாசம்
திருக்குற்ருலம் உத்தரகோசமங்கை திருப்பெருந்துறை

| | | |
|---|---|---|
| மதுரை | பழனி | விராலிமலை |
| திருப்பாண்டிக்கொடுமுடி | திருவானைக்கா | திருவையாறு |
| சுவாமிமலை | திருவிடைமருதூர் | திருப்பனந்தாள் |
| வேதாரண்யம் | திருப்புகலூர் | திருவாரூர் |
| திருநாகைக்காரோணம் | திருநள்ளாறு | காவிரிப்பூம்பட்டினம் |
| ஆக்கூர் | மாயூரம் | வைத்தீசுவரன்கோயில் |
| சீர்காழி | ஆச்சாள்புரம் | சிதம்பரம் |
| திருப்பாதிரிப்புலியூர் | விருத்தாசலம் | திருக்கோவிலூர் |
| திருவண்ணாமலை | திருமாகறல் | காஞ்சிபுரம் |
| திருக்கழுக்குன்றம் | சென்னை | திருவொற்றியூர் |
| வடதிருவாலங்காடு | திருத்தணிகை | காளஹஸ்தி |
| பிரயாகை | வாரணசி | டில்லி |
| ஹரத்துவார் | ரிஷிகேசம் | திருக்கேதாரம் |

ஆகிய 48 தலங்களில் நம்மால் மூலதனங்கள் நிறுவப்பெற்ற ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுநாளில் ஆண்டுதோறும் நம்மால் அன்னம்பாலிப்பு நிகழ்த்தப்பெற்று வருகிறது. அங்ஙனமே இம்முதற் பொருளினின்று கிடைக்கும் வட்டித் தொகையில் நிர்வாகச் செலவுகள் போக எஞ்சிய தொகை முழுதும், ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் சிவப்பேறு எய்திய வைகாசி அமரபக்ஷம் திருதியைநாளில் பாண்டியநாட்டுத் தலங்களுள் ஒன்றாகிய திருப்புத்தூரில் ஆண்டுதோறும் அந்தணர், அருந்தவர் ஏழைகட்கு அன்னம்பாலிக்கச் செலவு செய்யப்பெறும்.

4. ஆண்டுதோறும் வட்டி வரவுக்கேற்பவும், பொருள்களின் கால விலைக்கேற்பவும் நம்மால் தயாரிக்கப்பெறும் திட்ட ஜாப்தாவின்படி இவ்வன்னம்பாலிப்பு நடத்தப்பெற்று வரும்.

5. இவ்வட்டி வருமானம் வேறு எம்முறையிலும் பயன்படுத்தப்பெறமாட்டாது. இம்முதற்பொருள் திரும்பியளிக்கப் பெற்றதும், அதிக வட்டி தரக்கூடிய அரசியல் கடன் தாள்களிலோ அல்லது நிலையான முதலீடுகளிலோ முதலீடு செய்யப் பெறும். இம்முதற்பொருள் நம்பேரிலும் நமக்குப்பின் உரிமையுள்ளவர்கள் பேரிலும் இருந்துவரும்.

Tirupanandal
Dated 21-2-1967 } (Sd.) *Kasivasi Arulnandi Tambiran.*

Registered at Tiruvadamarudhur Sub Registrar's office on 23-2-67 as No. 7 of 1967 of Book 4, volume 53, pages 245 to 247.

| தொடர் எண் | புத்தகத்தின் பெயர் | ஆசிரியரின் பெயர் |
|---|---|---|
| 11235 | Sri Kumaragurupara Swamigal Arts College, Annual Magazine 1965—1966. | |
| 11236 | தமிழ்ப்புதையல் | பேராசிரியர் பாலூர் கண்ணப்ப முதலியார் |
| 11237 to 39 | ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி | தருமையாதீனம் |
| 11240 to 41 | கல்யாண் | |
| 11242 | குமர கோயிற் கலம்பகம் | செந்தமிழ் நிலையம், நாவலரகம், நாகர்கோயில்2. ஆக்கியோன் கவிராச பண்டித இராமசுப்பிரமணிய நாவலர் |
| 11243 | சோஷலிச நிர்மாணத்தின் வரலாறு | ஐ. பெர்க்கின் |
| 11244 to 45 | இந்துமதக் கொள்கைகளையே கிறிஸ்தவ வேத நூலும் இயேசுநாதரும் உணர்த்தியிருப்பதின் விளக்கம் | இந்து தர்மப் பிரசார சங்க வெளியீடு |
| 11246 | தொல்காப்பியம் சொல்லதிகாரம் சேனுவரையர் உரை (விளக்க உரையுடன்) | பதிப்பாசிரியர்:-பண்டித வித்வான் சைவப்புலவர் சித்தாந்தநன்மணி கு. சுந்தரமூர்த்தி, தமிழ் பேராசிரியர், செந்தமிழ்க் கல்லூரி, திருப்பனந்தாள். |
| 11247 | Of Human Bondage and Divine Grace | Annamalai University |
| 11248 | Special Lectures on Saiva Siddhanta | Thiruvasagamani K.M.Balasubramaniam Annamalai University |

| | | |
|---|---|---|
| 11249 | Collected Lectures on Saiva Siddhanta | Annamalai University |
| 11250 | திருப்புகழ்த்திரட்டு | முருகன் திருவருட் சங்க வெளியீடு, திருவல்லிக் கேணி, சென்னை – 5 |
| 11251 | பூவாலை முருகன் பதிகங்கள் | வெளியிட்டோர் – திரு கு. அருணசலநயினர், திருஞானசம்பந்தர் நூல் நிலையம், பூவாலை அஞ்சல் |
| 11252 | சிவஞானபோதம் | தருமை யாதீனம் 1966 |
| 11253 | ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி | ஷை |
| 11254 | விநாயகர் அகவல் | ஷை |
| 11255 | படிக்காசுத் தம்பிரான் அருளிய தண்டலையார் சதகம் | ஷை |
| 11256 | வேதாரண்ய தல புராணம் | சி. ப. விசுவனுத சுவாமிகள், சிதம்பரம் – பரஞ் சோதி ஆஸ்ரமஸ்தாபகர். |
| 11257 | திருவாசகம் (திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடம் வெளியீடு) | ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள் நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் நன்கொடை |
| 11258 | தத்துவப்பிரகாசம் | சைவ சித்தாந்த மகா சமாஜ அறுபதாண்டு நிறைவு மலர் |
| 11259 | திருக்களிற்றுப்படியார் | ஷை |
| 11260 | திருவாசகம் ஆராய்ச்சிக் குறிப்புக்கள் | ஷை |
| 11261 | திருவுந்தியார் | ஷை |
| 11262 | சைவசித்தாந்தச் சிறுநூல்கள் | ஷை |

உ
சிவ சிவ

# திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் — நாட் குறிப்பு

| பங்குனி | கிழமை | ஏப்ரல் | 1967 ஏப்ரல்<br>பராபவ பங்குனி — பிலவங்க சித்திரை |
|---|---|---|---|
| 18 | சனி | 1 | |
| 19 | ஞா யிறு | 2 | |
| 20 | திங் கள் | 3 | |
| 21 | செவ் வாய் | 4 | |
| 22 | புதன் | 5 | |
| 23 | வியா ழன் | 6 | |
| 24 | வெள் ளி | 7 | பிரதோஷம் : திருப்பனந்தாள்<br>ஸ்ரீ அருணசடேசுவரர் பிரதோஷக் கட்டளை |
| 25 | சனி | 8 | |

| பங்குனி | கிழமை | ஏப்ரல் | 1967 ஏப்ரல் பராபவ பங்குனி—பிலவங்க சித்திரை |
|---|---|---|---|
| 26 | ஞா யிறு | 9 | ● அமாவாசை |
| 27 | திங் கள் | 10 | தெலுங்கு வருஷப் பிறப்பு |
| 28 | செவ் வாய் | 11 | ஸ்ரீகாசிவாசி சாமிநாத சுவாமிகள் நினைவுநாள் மகேசுவர பூசை; ஸ்ரீ காசி, காஞ்சி, மதுரை, இராமேஸ்வரம் ஆகிய தலங்களில் அன்னம் பாலிப்பு |
| 29 | புதன் | 12 | |
| 30 | வியா ழன் | 13 | * கிருத்திகை: வேலூர் ஸ்ரீ முத்துக்குமார சுவாமி சந்தனாபிஷேகமும் திருமஞ்சனப்பரிசும் |

| சித்திரை | கிழமை | ஏப்ரல் | 1967 ஏப்ரல்<br>**பிலவங்க ௵ — சித்திரை** |
|---|---|---|---|
| | | | ஸ்ரீ காசியில்: அன்னம்பாலிப்பு: அப்பர் நினைவு; இசை ஞானியார் நினைவு; திருக்குறிப்புத் தொண்டர் நினைவு; ஸ்ரீ விசுவநாதர் கங்காபிஷேகம்.<br>இராமேசுவரத்தில்: கார்வேட்நகரம் ராஜா நினைவு அன்னம்பாலிப்பு.<br>சிதம்பரத்தில்: தில்லைவாழந்தணர் விசேட அன்னம்பாலிப்பு ஒரு நாள்.<br>தண்ணீர்ப்பந்தல்: பங்குனி 1ம்-உ முதல் சுவாமிமலை, திருவாப்பாடி, திருபுவனம் ஆகிய தலங்களிலும், பங்குனி உத்திர முதல் ஸ்ரீவைகுண்டம், இராமேசுவரம், திருப்பரங்குன்றம், மணிக்குடி, திருப்பனந்தாள், தத்துவாஞ்சேரி, வைத்தீசுவரன் கோவில் ஆகிய ஊர்களிலும், சித்திரை 1-உ முதல் வைகாசி முடிய திருச்செந்தூர், இராமேசுவரம், பழநி, காவிரிப்பூம்பட்டினம், சிதம்பரம், திருவண்ணுமலை, திருத்தணிகை ஆகிய தலங்களிலும். |
| 1 | வெள்ளி | 14 | தமிழ் வருஷப் பிறப்பு<br>சித்திரை விஷு — பழையபாபநாசத்தில் அகத்தியர் திருமணக் கோலக்காட்சி நாளில் அன்னம்பாலிப்பு (R. C.)<br>சித்திரை முதல் வெள்ளி — சீகாழிச் சட்டைநாதர் புழுகு நெய் சார்த்துதல் |
| 2 | சனி | 15 | |
| 3 | ஞாயிறு | 16 | குறிப்பு<br>சுசீந்திரம் ஸ்ரீ தாணுமாலய சுவாமி கோயில் சித்திரைப் பெருவிழா 3-ம் திருநாள் மண்டகப்படி. ஷ திருவிழா முன்றுநாட்கள் தேவார கோஷ்டி; எல்லா நாட்களும் வேதபாராயணமும் பிராமணபோஜனமும் மகேசுவரபூசையும். |

| சித்திரை | கிழமை | ஏப்ரல் | 1967 ஏப்ரல்<br>பிலவங்க ௵ — சித்திரை |
|---|---|---|---|
| 4 | திங்கள் | 17 | |
| 5 | செவ்வாய் | 18 | |
| 6 | புதன் | 19 | சித்திரை 6உ முதல் 29உ முடிய 19-4-67உ முதல் 12-5-67 முடிய - மதுரை ஸ்ரீ மீனாட்சி சுந்தரேசுவரர் கோயிலில் திருவிளையாடற் புராணச் சொற்பெருக்கு. |
| 7 | வியாழன் | 20 | |
| 8 | வெள்ளி | 21 | |
| 9 | சனி | 22 | பிரதோஷம்: திருப்பனந்தாள் ஸ்ரீ அருண சடேசுவரர் பிரதோஷக் கட்டளை. |
| 10 | ஞாயிறு | 23 | காஞ்சிபுரத்தில் ஸ்ரீ ஏகாம்பரநாதர்க்குப் புழுகு நெய் சார்த்துதல்; சித்திரை அத்தம்-மதுரைச் சொக்கலிங்கம் சந்தன மெய்ப்பூச்சு. |
| 11 | திங்கள் | 24 | ○ பௌர்ணமி<br>திருப்பனந்தாள் ஸ்ரீஅருணசடேசுவரர் கொள்ளிடத் தீர்த்தவிழா மண்டகப்படி.<br>பௌர்ணமி - திருப்பனந்தாள் ஸ்ரீ அருண சடேசுவரர் சந்தன மெய்ப்பூச்சு. |

| சித் திரை | கிழமை | ஏப்ரல் | 1967 ஏப்ரல் பிலவங்க ஹூ — சித்திரை |
|---|---|---|---|
| 12 | செவ் வாய் | 25 | |
| 13 | புதன் | 26 | |
| 14 | வியா ழன் | 27 | |
| 15 | வெள் ளி | 28 | |
| 16 | சனி | 29 | |
| 17 | ஞா யிறு | 30 | |
| சித் திரை | | மே மீ | 1967 மே மீ பிலவங்க சித்திரை - வைகாசி |
| 18 | திங் கள் | 1 | நடராஜாபிஷேகம் |
| 19 | செவ் வாய் | 2 | |

| சித் திரை | கிழமை | மே | 1967 மே<br>பிலவங்க ஸு — சித்திரை |
|---|---|---|---|
| 20 | புதன் | 3 | |
| 21 | வியா முன் | 4 | சித்திரைச் சதயம் – திருப்பூந்துருத்தியில் அப்பர் நினைவு அன்னம் பாலிப்பு; வடதிரு முல்லைவாயில் ஸ்ரீ மாசிலாமணியீசர்க்குச் சந் தனக்காப்பு. |
| 22 | வெள் ளி | 5 | |
| 23 | சனி | 6 | பிரதோஷம் – திருப்பனந்தாள் ஸ்ரீ அருண சடேசுவரர் பிரதோஷக் கட்டளை. |
| 24 | ஞா யிறு | 7 | |
| 25 | திங் கள் | 8 | சித்திரைப் பரணி – திருச்செங்காட்டங் குடியில் சிறுத் தொண்டர் நினைவு அன்னம் பாலிப்பு. |
| 26 | செவ் வாய் | 9 | ● அமாவாசை<br>* கிருத்திகை<br>வேளூர் முத்துக்குமாரசாமி சந்தனுபிஷே கமும் திருமஞ்சனப் பரிசும். |
| 27 | புதன் | 10 | |

| சித்திரை | கிழமை | மே | 1967 மே<br>பிலவங்க ஹ — சித்திரை |
|---|---|---|---|
| 28 | வியாழன் | 11 | |
| 29 | வெள்ளி | 12 | |
| 30 | சனி | 13 | |
| 31 | ஞாயிறு | 14 | |
| வைகாசி | | மே | வைகாசி மீ<br>ஸ்ரீ காசியில்: குமாரசுவாமி மடத்தில் திருநீலகண்டர் நினைவு அன்னம் பாலிப்பு; திருஞான சம்பந்தர் நினைவு அன்னம்பாலிப்பு; முருகநாயஞர் நினைவு அன்னம்பாலிப்பு.<br>இராமேசுவரத்தில்: கார்வேட்நகரம் ராஜா நினைவு அன்னம்பாலிப்பு.<br>திருக்கழுக்குன்றத்தில்: வைகாசி 1-உ தொடங்கித் தண்ணீர்ப் பந்தல் தருமம் ஆனி -மீ முழுவதும் நடைபெறும்.<br>கன்னியாகுமரி: வைகாசிப் பெருவிழாவில் பிராமண போசனம் மகேசுவர பூசை. |
| 1 | திங்கள் | 15 | ஆண்டு தோறும் மே 15-உ முதல் 5 மாதங்கள் நாடோறும் திருக்கேதாரம் பண்டாக்கள் இருவருக்கு அன்னம்பாலிப்பு. |
| 2 | செவ்வாய் | 16 | |

| வை காசி | கிழமை | மே | 1967 மே<br>பிலவங்க ஹூ — வைகாசி |
|---|---|---|---|
| 3 | புதன் | 17 | |
| 4 | வியா ழன் | 18 | |
| 5 | வெள் ளி | 19 | |
| 6 | சனி | 20 | |
| 7 | ஞா யிறு | 21 | பிரதோஷம்-திருப்பனந்தாள் ஸ்ரீ அருணஜடே சுவரர் பிரதோஷக்கட்டளை. |
| 8 | திங் கள் | 22 | |
| 9 | செவ் வாய் | 23 | ○ பௌர்ணமி |
| 10 | புதன் | 24 | |
| 11 | வியா ழன் | 25 | |

| வைகாசி | கிழமை | மே | 1967 மே<br>பிலவங்க ஹு — வைகாசி மாதம் |
|---|---|---|---|
| 12 | வெள்ளி | 26 | திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்தில் ஸ்ரீ ஆதிகுமர குருபர சுவாமிகள் 279-ஆம் ஆண்டு மகேசுவர பூசைத்திருநாள்: தெற்கே இராமேசுவரம் முதல் வடக்கே திருக்கேதாரம் வரை 49 தலங்களில் அந்தணர், அருந்தவர், ஏழைகளுக்கு அன்னம் பாலிப்பு:–<br>இராமேசுவரம் — ஆக்கூர்<br>கன்னியாகுமரி — மாயூரம்<br>திருச்செந்தூர் — வைத்தீசுவரன்கோவில்<br>ஸ்ரீவைகுண்டம் — சீர்காழி<br>திருநெல்வேலி — ஆச்சாள்புரம்<br>பழையபாவநாசம் — சிதம்பரம்<br>திருக்குற்ருலம் — திருப்பாதிரிப்புலியூர்<br>உத்தரகோசமங்கை — விருத்தாசலம்<br>திருப்பெருந்துறை — திருக்கோவலூர்<br>திருப்பத்தூர் — திருவண்ணுமலை<br>மதுரை — திருமாகறல்<br>பழனி — காஞ்சீபுரம்<br>விராலிமலை — திருக்கழுக்குன்றம்<br>திருப்பாண்டிக்கொடிமுடி — சென்னை<br>திருவானைக்கா — திருவொற்றியூர்<br>திருவையாறு — வடதிருவாலங்காடு<br>சுவாமிமலை — திருத்தணிகை<br>திருவிடைமருதூர் — காளஹஸ்தி<br>திருப்பனந்தாள் — பிரயாகை<br>வேதாரண்யம் — வாரணுசி<br>திருப்புகலூர் — டில்லி<br>திருவாரூர் — ஹரத்துவார்<br>திருநாகைக்காரோணம் — ரிஷிகேசம்<br>திருநள்ளாறு — திருக்கேதாரம்<br>காவிரிப்பூம்பட்டினம்<br>ஆகிய 49 தலங்களில் அன்னம்பாலிப்பு.<br>திருச்செந்தூரில் கந்தர் கலிவெண்பா பாராயண ஓதுவார்க்குப் பரிசு.<br>மதுரையில் காலை 6 மணி முதல் இரவு 8 மணி வரையில் திருமுறை அகண்டபாராயணம்,<br>மதுரையில் இரவு 8 மணி முதல் மறுநாட் காலை 6 மணி வரையில் திருமுறை விழா. |

| வை காசி | கிழமை | மே | 1967 மே<br>பிலவங்க ஹு — வைகாசி மாதம் |
|---|---|---|---|
| 13 | சனி | 27 | |
| 14 | ஞா யிறு | 28 | காஞ்சிபுரம் ஸ்ரீ ஏகாம்பரநாதர்க்குப் புனுகு தைலாபிஷேகம். |
| 15 | திங் கள் | 29 | தருமபுரம் ஸ்ரீ குருஞான சம்பந்த பரமாசாரிய சுவாமிகள் குருபூசை (R. C.) |
| 16 | செவ் வாய் | 30 | |
| 17 | புதன் | 31 | |
| வை காசி | | ஜுன் | 1967 ஜுன் மீ<br>பிலவங்க வைகாசி - ஆனி |
| 18 | வியா ழன் | 1 | |
| 19 | வெள் ளி | 2 | |
| 20 | சனி | 3 | |

| வை காசி | கிழமை | ஜுன் | 1967 ஜுன் பிலவங்க ஹூ — வைகாசி |
|---|---|---|---|
| 21 | ஞா யிறு | 4 | 4உ முதல் 12உ முடியச் சிதம்பரத்தில் பெரிய புராணப் பிரசங்கங்கள் |
| 22 | திங் கள் | 5 | பிரதோஷம் — திருப்பனந்தாள் ஸ்ரீ அருண சடேசுவரர் பிரதோஷக் கட்டளை. |
| 23 | செவ் வாய் | 6 | * கிருத்திகை வேளூர் ஸ்ரீ முத்துக்குமாரசுவாமி சந்தனு பிஷேகமும் திருமஞ்சனப் பரிசும். |
| 24 | புதன் | 7 | ● அமாவாசை |
| 25 | வியா ழன் | 8 | |
| 26 | வெள் ளி | 9 | |
| 27 | சனி | 10 | |
| 28 | ஞா யிறு | 11 | வைகாசிப் புனர்பூசம் — திருநாரையூரில் நம்பியாண்டார் நம்பிகள் திருமுறைத் திரு விழா (R. C.) |
| 29 | திங் கள் | 12 | வைகாசிப் பூசம் — குன்றத்தூரில் சேக் கிழார் நினைவு அன்னம் பாலிப்பு (R. C.) |

| வை காசி | கிழமை | ஜுன் | 1967 ஜுன்<br>பிலவங்க ௵ — வைகாசி |
|---|---|---|---|
| 30 | செவ்வாய் | 13 | |
| 31 | புதன் | 14 | |
| ஆனி | | ஜுன் | ஆனி மீ<br>ஸ்ரீ காசியில்: (1) குமாரசுவாமி மடத்தில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு அன்னம் பாலிப்பு. (2) ராமநாதபுரம் ராஜா நினைவு அன்னம் பாலிப்பு. (3) நன்பாட்டுப் புலவர் நினைவு அன்னம் பாலிப்பு.<br>இராமேசுவரத்தில் கார்வேட்நகர் ராஜா நினைவு அன்னம் பாலிப்பு. |
| 1 | வியாழன் | 15 | |
| 2 | வெள்ளி | 16 | |
| 3 | சனி | 17 | |
| 4 | ஞாயிறு | 18 | |

| ஆனி | கிழமை | ஜுன் | 1967 ஜுன்<br>பிலவங்க ௵ — ஆனி |
|---|---|---|---|
| 5 | திங்கள் | 19 | பிரதோஷம் – திருப்பனந்தாள் ஸ்ரீ அருண சடேசுவரர் பிரதோஷக் கட்டளை. |
| 6 | செவ்வாய் | 20 | |
| 7 | புதன் | 21 | ○ பௌர்ணமி<br>காரைக்கால் மாம்பழத் திருநாள் அன்னம் பாலிப்பு. |
| 8 | வியாழன் | 22 | |
| 9 | வெள்ளி | 23 | |
| 10 | சனி | 24 | |
| 11 | ஞாயிறு | 25 | காஞ்சிபுரம் ஸ்ரீ ஏகாம்பரநாதர்க்குப் புனுகு தைலாபிஷேகம். |
| 12 | திங்கள் | 26 | |
| 13 | செவ்வாய் | 27 | |

| ஆனி | கிழமை | ஜூன் | 1967 ஜூன்<br>பிலவங்க ஹூ — ஆனி |
|---|---|---|---|
| 14 | புதன் | 28 | |
| 15 | வியாழன் | 29 | |
| 16 | வெள்ளி | 30 | |
| ஆனி | | ஜூலை மீ | 1967 ஜூலை மீ<br>பிலவங்க ஆனி — ஆடி |
| 17 | சனி | 1 | பிற்கண்டவற்றுக்குத் தொகை அனுப்புதல் R C:-<br>ஸ்ரீவைகுண்டத்தில் ஆதிகுமரகுருபர சுவாமிகள் நித்திய மகேசுவர பூசை<br>ஸ்ரீவைகுண்டத்தில் தேவாரப்பாடசாலை ஆசிரியருக்குச் சம்பளம்<br>சுவாமிமலை ஸ்ரீ சுவாமிநாத சுவாமிக்கு ஒருகாலக் கட்டளை<br>கொட்டையூர் ஸ்ரீ கோடீசுவர சுவாமி உச்சிக்காலக் கட்டளை<br>கும்பகோணம் ஸ்ரீ கௌதமேசுவரர் காலசந்திக் கட்டளை<br>சிதம்பரம் ஸ்ரீ தில்லைக்கோவிந்தராசப் பெருமாள் உச்சிக்காலக் கட்டளை<br>திருவல்லிக்கேணி ஸ்ரீபார்த்தசாரதிப்பெருமாள் ததியாராதனை (சென்னை ஹைகோர்ட்டு Official டிரஸ்டியிடம்)<br>திருச்செந்தூர் ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி நித்தியப்படி கட்டளை<br>மதுரை ஸ்ரீ மீனாட்சி சுந்தரேசுவரர் ஒருகாலக்கட்டளை |

| ஆனி | கிழமை | ஜூலை | 1967 ஜூலை<br>பிலவங்க ஞு — ஆனி |
|---|---|---|---|
| | | | திருலோக்கி ஸ்ரீ சுந்தரேசுவரர் ஒருகாலக் கட்டளை<br>திருஆப்பாடி ஸ்ரீ பாலுகந்தநாத சுவாமி நித்தியப்படி கட்டளை<br>ஸ்ரீரங்கம் ஸ்ரீ அரங்கநாதசுவாமி கோயில் துவாதசிக் கட்டளை<br>திருச்செந்தூர், சுவாமிமலை, பழைய பாபநாசம், திருவண்ணுமலை, திருலோக்கி, திருவாப்பாடி ஆகிய தலங்களில் கோ சம்வர்த்தன உதவி |
| 18 | ஞாயிறு | 2 | |
| 19 | திங்கள் | 3 | |
| 20 | செவ்வாய் | 4 | * கிருத்திகை<br>வேளூர் முத்துக்குமாரசுவாமி சந்தனுபிஷேகமும் திருமஞ்சனப் பரிசும் |
| 21 | புதன் | 5 | பிரதோஷம் – திருப்பனந்தாள் ஸ்ரீஅருணசடேசுவரர் பிரதோஷக் கட்டளை |
| 22 | வியாழன் | 6 | |
| 23 | வெள்ளி | 7 | ● அமாவாசை<br>7-உ முதல் 11-உ வரை சிதம்பரத்தில் திருவாசகப் பிரசங்கங்கள் |

| ஆனி | கிழமை | ஜுலை | 1967 ஜுலை<br>பிலவங்க ஞூ — ஆனி |
|---|---|---|---|
| 24 | சனி | 8 | |
| 25 | ஞா யிறு | 9 | |
| 26 | திங் கள் | 10 | |
| 27 | செவ் வாய் | 11 | ஆனி மகம் – ஸ்ரீ காசி, திருவாதவூர் திருக்கழுக்குன்றம் – மாணிக்கவாசகர் நினைவு அன்னம் பாலிப்பு |
| 28 | புதன் | 12 | |
| 29 | வியா ழன் | 13 | ஆனித் திருமஞ்சனத்திருவிழா நாட்களில் சிதம்பரத்தில் காசி மடத்தில் தில்லைவாழந்த ணர் விசேட அன்னம்பாலிப்பு; ஆனித் திரு மஞ்சன அன்னம் பாலிப்பு<br>சிதம்பரத்தில் தில்லைவாழந்தணர் திருமஞ் சனப் பரிசு<br>,, நடராசாபிஷேகம் |
| 30 | வெள் ளி | 14 | |
| 31 | சனி | 15 | |
| 32 | ஞா யிறு | 16 | |

| ஆடி | கிழமை | ஜூலை | 1967 ஜூலை<br>பிலவங்க ஸூ — ஆடி |
|---|---|---|---|
| ஆடி | | ஜூலை | ஸ்ரீ காசியில் 1) ஸ்ரீ குமாரசாமி மடத்தில் சுந்தரர் நினைவு அன்னம் பாலிப்பு.<br>2) ஸ்ரீ குமாரசாமி மடத்தில் மும்மையால் உலகாண்ட மூர்த்தியார் நினைவு அன்னம் பாலிப்பு.<br>3) ஸ்ரீ குமாரசாமி மடத்தில் ராமநாதபுரம் ராஜா நினைவு அன்னம் பாலிப்பு.<br>இராமேசுவரத்தில் 1) ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு அன்னம் பாலிப்பு.<br>2) ஆடித் திருக்கல்யாணத் திருவிழாவில் கந்தமாதனவெற்பு மண்டகப்படியில் சுவாமி சீர்பாதம் வகையரு புளியன்னம், தயிரன்னம். |
| 1 | திங்கள் | 17 | |
| 2 | செவ்வாய் | 18 | பிரதோஷம். திருப்பனந்தாள் ஸ்ரீ அருணசடேசுவரர் பிரதோஷக் கட்டளை. |
| 3 | புதன் | 19 | |
| 4 | வியாழன் | 20 | |
| 5 | வெள்ளி | 21 | ○ பௌர்ணமி |

| ஆடி | கிழமை | ஜூலை | 1967 ஜூலை<br>பிலவங்க ஸ்ரீ — ஆடி |
|---|---|---|---|
| 6 | சனி | 22 | |
| 7 | ஞா யிறு | 23 | காஞ்சிபுரத்தில் ஸ்ரீ ஏகாம்பரநாதர் புனுகு தைலாபிஷேகம். |
| 8 | திங் கள் | 24 | |
| 9 | செவ் வாய் | 25 | |
| 10 | புதன் | 26 | |
| 11 | வியா ழன் | 27 | |
| 12 | வெள் ளி | 28 | |
| 13 | சனி | 29 | |
| 14 | ஞா யிறு | 30 | |

| ஆடி | கிழமை | ஜூலை | 1967 ஜூலை<br>பிலவங்க ஞூ — ஆடி |
|---|---|---|---|
| 15 | திங்கள் | 31 | * கிருத்திகை<br>வேளூர் ஸ்ரீ முத்துக்குமாரசுவாமி சந்தனு பிஷேகமும் திருமஞ்சனப் பரிசும்.<br>மூர்த்திநாயனுர் திருநாள்; மதுரையில் ஸ்ரீ மீனுட்சி சுந்தரேசுவரர் அபிஷேக நிவே தனம். |

| ஆடி | | ஆகஸ்டு | 1967 ஆகஸ்டு மீ<br>பிலவங்க ஆடி - ஆவணி |
|---|---|---|---|
| 16 | செவ்வாய் | 1 | |
| 17 | புதன் | 2 | |
| 18 | வியாழன் | 3 | பிரதோஷம் – திருப்பனந்தாள் ஸ்ரீ அருண சடேசுவரர் பிரதோஷக் கட்டளை. |
| 19 | வெள்ளி | 4 | 4-உ முதல் 12-உ முடிய – மதுரையில் பெரிய புராணச் சொற்பெருக்கு. |
| 20 | சனி | 5 | ● ஆடிஅமாவாசை<br>இராமேசுவரத்திலும், காவிரிப்பூம் பட்டினத்திலும் அன்னம் பாலிப்பு |
| 21 | ஞாயிறு | 6 | |

| ஆடி | கிழமை | ஆகஸ்டு | 1967 ஆகஸ்டு<br>பிலவங்க ஆடி - ஆவணி |
|---|---|---|---|
| 22 | திங்கள் | 7 | |
| 23 | செவ்வாய் | 8 | |
| 24 | புதன் | 9 | |
| 25 | வியாழன் | 10 | |
| 26 | வெள்ளி | 11 | |
| 27 | சனி | 12 | ஆடிச்சுவாதி - திருவஞ்சைக்களத்தில் சேரமான் பெருமாள் நினைவு அன்னம்பாலிப்பு<br>,, - சிதம்பரத்தில் திருமுறைத் திருவிழா.<br>,, - திருப்பனந்தாள் ஸ்ரீ அருணசடேசுவரர் சந்தன மெய்ப்பூச்சு. |
| 28 | ஞாயிறு | 13 | |

| ஆடி | கிழமை | ஆகஸ்டு | 1967 ஆகஸ்டு<br>பிலவங்க ஹு ஆடி — ஆவணி |
|---|---|---|---|
| 29 | திங்கள் | 14 | |
| 30 | செவ்வாய் | 15 | |
| 31 | புதன் | 16 | |
| ஆவணி | | ஆகஸ்டு | ஆவணி மீ<br>ஸ்ரீ காசியில்: குமாரசாமி மடத்தில் அரிமர்த்தன பாண்டியன் நினைவு அன்னம் பாலிப்பு. "ஷ குலச்சிறை நாயனுர் நினைவு அன்னம்பாலிப்பு". ஷ குங்குலியக் கலையர் நினைவு அன்னம்பாலிப்பு. |
| 1 | வியாழன் | 17 | பிரதோஷம் - திருப்பனந்தாள் ஸ்ரீ அருணசடேசுவரர் பிரதோஷக் கட்டளை. |
| 2 | வெள்ளி | 18 | நடராஜாபிஷேகம்<br>வரலக்ஷ்மி விரதம் |
| 3 | சனி | 19 | ○ பௌர்ணமி ரிக்யசுர் உபாகர்மா |
| 4 | ஞாயிறு | 20 | |

| ஆவணி | கிழமை | ஆகஸ்டு | 1967 ஆகஸ்டு<br>பிலவங்க ௵ — ஆவணி |
|---|---|---|---|
| 5 | திங்கள் | 21 | |
| 6 | செவ்வாய் | 22 | |
| 7 | புதன் | 23 | |
| 8 | வியாழன் | 24 | |
| 9 | வெள்ளி | 25 | |
| 10 | சனி | 26 | |
| 11 | ஞாயிறு | 27 | * கிருத்திகை கோகுலாஷ்டமி<br>வேளூர் ஸ்ரீ முத்துக்குமாரசுவாமி சந்தனாபிஷேகமும் திருமஞ்சனப் பரிசும்.<br>காஞ்சிபுரத்தில் ஸ்ரீ ஏகாம்பர நாதர்க்குப் புனுகு தைலாபிஷேகம் |
| 12 | திங்கள் | 28 | |

| ஆவணி | கிழமை | ஆகஸ்டு | 1967 ஆகஸ்டு<br>பிலவங்க ஹூ — ஆவணி |
|---|---|---|---|
| 13 | செவ்வாய் | 29 | |
| 14 | புதன் | 30 | |
| 15 | வியாழன் | 31 | |

| ஆவணி | | செப்டம்பர் | 1967 செப்டம்பர் மீ<br>பிலவங்க ஆவணி – புரட்டாசி |
|---|---|---|---|
| 16 | வெள்ளி | 1 | |
| 17 | சனி | 2 | பிரதோஷம் - திருப்பனந்தாள் ஸ்ரீ அருணசடேசுவரர் பிரதோஷக்கட்டளை |
| 18 | ஞாயிறு | 3 | |
| 19 | திங்கள் | 4 | ● அமாவாசை |
| 20 | செவ்வாய் | 5 | |

| ஆவணி | கிழமை | செப் டம்பர் | 1967 செப்டம்பர் மீ<br>பிலவங்க ஆவணி – புரட்டாசி |
|---|---|---|---|
| 21 | புதன் | 6 | |
| 22 | வியா ழன் | 7 | விநாயக சதுர்த்தி |
| 23 | வெள் ளி | 8 | |
| 24 | சனி | 9 | |
| 25 | ஞா யிறு | 10 | |
| 26 | திங் கள் | 11 | |
| 27 | செவ் வாய் | 12 | ஆவணி மூலம்:<br>சிதம்பரத்திலும், மதுரையிலும், திருச்செந் தூரிலும் அன்னம்பாலிப்பு.<br>திருநள்ளாற்றில் அன்னம்பாலிப்பு.<br>திருச்சிராப்பள்ளியில் திருமுறைத் திருவிழா.<br>காஞ்சிபுரம் - திருவேகம்பப் பெருமானுக்குக் காலையிலும் மாலையிலும் விசேஷ புனுகு தைலாபிஷேகம்.<br>ஷை சிவாசாரியர்களுக்கு அன்னம் பாலிப்பு<br>மதுரையில் - ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமானுக் குச் சந்தன மெய்ப்பூச்சு.<br>பழனியில் - சாதுக்களுக்கு அன்னம்பாலிப்பு<br>பாடல் பெற்ற சிவத்தலம் ஒன்றில் விசேஷ அபிஷேக ஆராதனை (R. C.) |

உ

## திருப்பனந்தாள் - ஸ்ரீ காசி மடம்

# 'திருமுறை வெளியீடுகள்'

| எண் | நூல் | | ரூ. | பை |
|---|---|---|---|---|
| 1 | விநாயகர் திருமுறை (அச்சில) | ... | | |
| 2 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு டாக்டர் சாமிநாத ஐயர் குறிப்புரையுடன் (புதிய பதிப்பு) | ... | 3 | 50 |
| 3 | சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தம் | ... | 3 | 00 |
| 4* | திருஞானசம்பந்தர் தேவாரம் (மூலம் மட்டும் புதிய பதிப்பு) | ... | 2 | 75 |
| 5* | திருநாவுக்கரசர் தேவாரம் ,, | ... | 2 | 00 |
| 6* | சுந்தரர் தேவாரம் ,, | ... | 1 | 30 |
| 7* | திருவாசகம் (புதிய பதிப்பு) | ... | 0 | 65 |
| 8* | திருக்கோவையார்-பேராசிரியர் உரையும் பழைய உரையும் (புதிய பதிப்பு) | ... | 2 | 90 |
| 9* | ஒன்பதாம் திருமுறை-திருவிசைப்பாவும் திருப்பல்லாண்டும் தெளிவுரை | ... | 1 | 50 |
| 10 | ,, ,, மூலம் மட்டும் | ... | 0 | 56 |
| 11* | திருமந்திரம் (புதிய பதிப்பு) ,, | ... | 2 | 25 |
| 12* | பதினோராந்திருமுறை (புதிய பதிப்பு) ,, | ... | 1 | 50 |
| 13* | பெரியபுராணம் (மூலம்மட்டும்) | ... | 3 | 00 |
| 14 | பெரியபுராணம் உரை நடை | ... | 2 | 00 |
| 15 | திருத்தொண்டர் புராண சாரம் | ... | 0 | 40 |
| 16* | அகத்தியர் தேவாரத் திரட்டு | ... | 0 | 36 |
| 17 | திருவிளையாடற் புராணம் மூலம் மட்டும் | ... | 3 | 00 |
| 18 | திருவிளையாடற் புராணம் உரை நடை | ... | 2 | 25 |
| 19 | கந்தபுராணச் சுருக்கம் (மூலம் மட்டும்) | ... | 1 | 75 |
| 20 | கந்த புராணம் – முதல் மூன்று காண்டங்கள் மூலம் மட்டும் | ... | 2 | 75 |
| 21 | ,, யுத்த தேவ காண்டம் ,, | ... | 2 | 00 |
| 22 | ,, தக்ஷகாண்டம் ,, | ... | 1 | 50 |
| 23 | கந்தபுராண உரைநடை ,, | ... | 3 | 00 |
| 24 | திருக்குறள்-அறத்துப்பால் மூலமும் குறிப்புரையும் ஹிந்தி மொழி பெயர்ப்பும் | ... | 1 | 50 |
| 25 | திருக்குறள்-பொருட்பால் ,, | ... | 2 | 50 |
| 26 | திருக்குறள் – காமத்துப்பால் ,, | | | |
| | ஷ 24. 25, 26. திருக்குறள் 3 புத்தகமும் | ... | 4 | 00 |
| 27 | திருக்குறள் மூலமும் குறிப்புரையும் (அச்சில்) | | | |
| 28 | தாயுமானசுவாமிகள் பா[illegible] குறிப்புரையுடன் | ... | 1 | 25 |
| 29 | அம்மையார் அற்புதத் திருவந்தாதி (புதிய பதிப்பு) | ... | 0 | 25 |
| 30 | திருக்கைலாய ஞானவுலா– உரையுடன் | ... | 0 | 50 |
| 31 | கந்தர் அலங்காரம் குறிப்புரையுடன் | ... | 0 | 25 |
| 32 | கந்தரனுபூதி மூலம் (அச்சில்) | | | |
| 33 | கந்தரனுபூதி தெளிவுரை | ... | 0 | 35 |
| 34 | கந்தர்கலி வெண்பா - ஆங்கிலம் ஹிந்தி மொழிபெயர்ப்புகளுடன் (அச்சில்) | | | |
| 35 | கந்தர்கலி வெண்பா மூலம் மட்டும் | ... | 0 | 10 |
| 36 | கந்தர்கலி வெண்பா மூலமும் உரையும் (அச்சில்) | | | |
| 37 | நீதிநெறி விளக்கம் - ஆங்கிலமும் ஹிந்தியும் | ... | 0 | 50 |

Registered With the Registrar of Newspapers for India
Under No. R. No. 1485/57.

Regd. No. M. 5574 

| | | |
|---|---|---|
| 39 | நீதிநெறி விளக்கமும் நன்னெறியும்-மூலம் ... | 0 15 |
| 40 | திருவுசாத்தானக் கல்வெழுத்துக்கள் ... | 0 37 |
| 41 | திருக்குறள்-பொருட்பால்-பரிமேலழகர் உரை இலக்கணக் குறிப்பின் விளக்கம் ... | 0 !3 |
| 42 | திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா-மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்-மதுரைக் கலம்பகம்-நீதிநெறி விளக்கம்-மதுரை மீனாட்சியம்மை இரட்டைமணி மாலை-மதுரை மீனாட்சியம்மை குறம் ... | 2 75 |
| 43 | திருவாரூர் நான்மணிமாலை-முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ் | 1 25 |
| 44 | சிதம்பர மும்மணிக்கோவை-சிதம்பரச் செய்யுட் கோவை தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை ... | 1 00 |
| 45 | பண்டார மும்மணிக் கோவை-காசிக்கலம்பகம் சகலகலாவல்லி மாலை ... | 1 00 |
| 46 | சிதம்பரச் செய்யுட்கோவை ... | 0 75 |
| 47 | முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் ... | 0 50 |
| 48 | திருவருட்பயன் மூலம் இந்தி, ஆங்கில மொழிபெயர்ப்புடன் ... | 1 00 |
| 49 | திருக்கயிலைத் திருமுறை ... | 0 37 |
| 50 | திருக்கடவூர்த் திருமுறையும் பிரபந்தங்களும் ... | 0 19 |
| 51 | செந்திலாண்டவன் மகிமை ... | 0 15 |
| 52 | திருக்குறள்-உரைக்கொத்து-அறத்துப்பால் 3-ம் பதிப்பு ... | 1 37 |
| 53 | ,, ,, பொருட்பால் 2-ம் பதிப்பு ... | 2 75 |
| 54 | ஐந்து நீதி நூல்கள் ... | 0 10 |
| 55 | ஸ்ரீ சயிலம் ... | 0 10 |
| 56 | திருவாசகம் குறிப்புரையுடன் (விஷய சூசனத்துடன்) பழைய பதிப்பு | 1 50 |
| 57 | திருவாரூர்-திருப்பதுவல்கள் ... | 0 10 |
| 58 | திருவெம்பாவை-திருப்பள்ளியெழுச்சி ... | 0 10 |
| 59 | பழமொழித்திருமுறை ... | 0 25 |
| 60 | திருவாரூர் நான்மணிமாலை ... | 0 50 |
| 61 | Hymns and Proverbs ... | 0 30 |
| 62 | அப்பர்விழா வெளியீடு ... | 0 25 |
| 63 | நவக்கிரகமாண்பு ... | 0 25 |
| 64 | குமரகுருபரர் வரலாறும், அற்புதத்தேவாரத் திரட்டும் ... | 0 30 |

மேலே கண்ட நூல்கள் கிடைக்குமிடங்கள்:-

1. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோயில், ஸ்ரீவைகுண்டம்.
2. ஸ்ரீ K. சுப்பிரமணிய அய்யர் அவர்கள்.
   "தியாகராஜ விலாசம்" 53. பிள்ளையார் கோயில்தெரு,
   திருவேட்டீச்வரன்பேட்டை, திருவல்லிக்கேணி, சென்னை-5

குறிப்பு:- • இக்குறிப்பிடப் பெற்றவற்றின் விற்பனைத் தொகை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களால் விருப்பப்பெற்ற பன்னிரு திருமுறைப் பதிப்பு நிதியைச்சாரும். மற்ற நூல்களில் திருக்குறள் உரைக்கொத்து (எண் 52, 53, 54) தவிர்த்து எஞ்சியவற்றின் விற்பனைத்தொகை 'குமரகுருபரன்' பத்திரிகையைச்சாரும்.